# செந்தமிழ்ச் செல்வி



## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

பதினொன்றாவது பரல்

சிலம்பு-௫௦ வள்ளுவர் ஆண்டு ௨௦௦௭ ஆனி, (July'76) பரல்-௧௧

---

## உள்ளுறை

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௦ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௭, ஆனி ஜூலை 1976 | பரல் ௧௧ |
|---|---|---|

## மறைமலையடிகள் தமிழ்ப் பேரறிஞர் மட்டுமல்லர் பலதுறைப் பெரு நிறுவனமாக விளங்குபவர்

(முன் பரல் ௫௧௫ஆம் பக்கத் தொடர்ச்சி)

வீட்டில் மக்களுக்கோ, மனைவிக்கோ தமக்கோ நோய்கள் ஏற்பட்டால் அவற்றைத் தீர்ப்பதற்கேற்ற சித்த மருந்துகளும் ஆயுர்வேத மருந்துகளும், முன்னமே தேர்ந்தெடுத்து வாங்கி வைத்து அவற்றைக் கொடுத்து நோய் நீக்குவர். இயற்கை மருத்துவத்தையும் கையாள்வர். நீரேற்றி (எனிமா) கொண்டு குடரைக் கழுவுதல், தண்ணீர்த் தொட்டியில் உட்கார வைத்தல், நீராவிகொண்டு வேது பிடித்தல் முதலியன இயற்கை மருத்துவ முறைகளாகும். இளைப்பிருமல் போன்ற சில நோய்கட்கு ஹிப்நாடிசம், மெஸ்மரிசம் போன்ற வசிய முறைகளைக் கையாண்டு அவற்றை நீக்குவர். அம்முறையில் தம் மகன் மறை திருநாவுக்கரசுக்கு ஏற்பட்ட இளைப்பிருமலை அறவே நீக்கினர். அத்துறையில் ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற பல நூல்களைக் கற்று 'மனிதவசியம்' (மனக்கவர்ச்சி,) ''தொலைவிலுணர்தல்,'' (டெலிபதி), ''யோக நித்திரை'' (அறிதுயில்), மக்கள் நூருண்டு உயிர்வாழ்தல் எப்படி? என்னும் நூல்களை எழுதியுள்ளனர். இம்முறையில் நோய் தீர்க்கும் மருத்துவக் கலைஞராக விளங்கினர்.

நூல் பயில்வதில் அடிகள் பெருவிருப்புடையவராதலால் தமது ஆராய்ச்சிக்கு வேண்டிய நூல்களைத் தாமே சென்னையிலுள்ள ஆங்கில நூல் வணிகர்களிடம் சென்று வாங்குவர். எழுதியனுப்பி நூல்களைத் தமது பார்வைக்கு அனுப்பச்செய்து அவற்றில் தமக்கு வேண்டியவற்றைமட்டும் எடுத்துக்கொண்டு

எஞ்சிய நூல்களைத் திருப்பிவிடுவர். அங்ஙனமே வெளிநாடு களிலுள்ள சில புத்தக வணிகர்களிடமிருந்தும் ஆங்கில நூல் களைப் பார்வைக்கு வரவழைத்துத் தமக்கு வேண்டிய நூல்களை எடுத்துக்கொண்டு அவற்றிற்குரிய பணத்தை அனுப்பி வைப்ப தோடு எஞ்சிய நூல்களைத் திருப்பி விடுவர். இம் முறையில் ஆங்கில நூல் வணிகரிடத்தில் பெருமதிப்புக் கொண்டிருந் தனர். இவ்வாறே தமிழ், சமற்கிருத நூல்கள் ஒரு சிலவும், பல துறைகளில் உள்ள ஆங்கில நூல்கள் பலவுமாக ஏறக்குறைய 4000 நூல்கள் தொகுத்து வைத்திருந்தனர். அத்தனை நூல் கட்கும் மேலுறையிட்டும் தம் பெயரை முகப்பில் எழுதியும் கண்ணாடிக் கதவுப் பேழைகளில் அழகுற அடுக்கிவைத்திருந்த னர். ஆங்கில நூல்கள் சிலவற்றில் அச்சிட்ட படிவங்களின் விளிம்பு அறுக்கப்படாமலிருக்கும். பகல் உணவுக்குப் பின் அடிகள் சிறிது நேரம் நாற்காலியில் அமர்ந்து அந்நூல்களை எடுத்துத் தாள்வெட்டி (paper cutter) கொண்டு விளிம்பு மடிப்பை அறுத்து அவற்றிற்கு மேலுறை இடுவர். படித்து முடிக்கும்வரை நூல்கள் தமது நூல்பயில் அறையிலுள்ள மேசைமீதும் அதன்மேல் நிறுத்தப்பட்டுள்ள சிறிய அடுக்கு நிலை (book rack)யிலும் வைக்கப்பெறும். படிக்கப்பெற்ற நூல்களைக் கண்ணாடிப் பேழையில் எடுத்துவைப்பர். எந்த நூல் எந்தப் பேழையில் எந்தத் தட்டில் இருக்கிறது என்பது அடிகளுக்கு மட்டுமே தெரியும். அவர்கள் படித்த நூல்களி லெல்லாம் முக்கியமான இடங்களில் அடிக்கோடுகளும், ஓரக் குறிப்புக்களும் காணப்பெறும். குறிப்பிட்ட நாட்களில் ஒரு சில நூல்களைத் தூசு துடைக்கும் வகையில் நூல்கள் முழுவதும் ஓராண்டிற்குள் ஒருமுறையோ, இரு முறையோ தூசு துடைக் கப்பெறுவதாக அமையும். சில நாட்களில் கன்னிமாரா நூல் நிலையத்திற்கும், சென்னைப் பல்கலைக்கழக நூல்நிலையத்திற்கும் சில அரிய நூல்களைப் படிக்கும் பொருட்டுப் போய்வருவதுண்டு. இந்த முறையில் அடிகள் நூல்நிலையக் கலைஞராக விளங்கினர்.

1905 சூலைத் திங்கள் 7ஆம் நாள் திருப்பாதிரிப்புலியூரில் அருட்டிரு ஞானியாரடிகள் திருமுன்பு அடிகளால் ''சைவ சித்தாந்த மகா சமாசம்'' தோற்றுவிக்கப்பெற்றது. 1906ஆம் ஆண்டு முதல் 1909ஆம் ஆண்டுவரை 4 ஆண்டுகள் சமாச ஆண்டு விழாக்கள் பெருஞ் சிறப்பாக அடிகளால் நடத்தப் பெற்றன. முதலாண்டு விழா சிதம்பரத்தில் கொழும்பு, மதிப்புமிகு இராமநாதன் துரை அவர்கள் தலைமையிலும், 2ஆம் ஆண்டுவிழா சிதம்பரத்தில் மதிப்புமிகு பாண்டித்துரைத் தேவர் அவர்கள் தலைமையிலும், 3ஆம் ஆண்டுவிழா நாகையில்

நடுவர் ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை அவர்கள் தலைமையிலும், நான்காம் ஆண்டு விழா திருச்சியில் யாழ்ப்பாணம் மதிப்புமிகு கனகசபை துரை அவர்கள் தலைமையிலும் சிறப்பாக நடைபெற்றன. அக்காலத்தில் அடிகள் வெளியிட்டு வந்த தமிழ் இதழ் ''ஞானசாகரமும்'' ஆங்கில இதழ் ''ஓரியண்டல் மிஸ்டிக் மைனு'' வும் சமாச வெளியீடுகளாகப் பதிப்பிக்கப்பெற்றன.

அடிகள் தமிழ் நாடெங்கணும் சென்று முன்னமே நடைபெற்றுவந்த சென்னை மெய்கண்ட சந்தானசபை, கீழ்வேளூர் கேடிலி சைவ சித்தாந்த சபை, நாகை சைவ சித்தாந்த சபை, தஞ்சை சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை, திருச்சி சைவசித்தாந்த சபை ஆகியவற்றை, சமாசத்தோடு கிளைச் சபைகளாக இணைத்தும் சென்னையில் தம்முடைய தலைமையில் திருவருட்பிரகாச சபை, மதுரையில் திருவாலவாய்ச் சித்தாந்த சபை, மன்னார்குடியில் சைவ சித்தாந்த சபை ஆகியவைகளைத் தோற்றுவித்தும், அச் சபைகட்கெல்லாம் இடையிடையே சென்று விரிவுரை ஆற்றிச் சமய உணர்வை ஊட்டியும் வந்தனர். வேனிற்காலம், கார்காலம், முன்பனிக் காலம், குளிர் காலம் என்னும் நான்கு பருவ காலங்களிலும் தெற்கே தூத்துக்குடி முதல் வடக்கே சிற்றூர் மேற்கே பெங்களூர் வரை பல ஊர்கட்குஞ் சென்று சைவசித்தாந்தச் சொற்பொழிவாற்றும் பழக்கத்தையும் அடிகளே ஏற்படுத்தினர். இம்முறையில் அடிகள் போக்குவரத்து வசதிகள் அற்ற காலத்தில் பேருழைப்போடு சமய உலகிற்குப் புதுவழி காட்டிய பெருநெறியாளர் ஆவர்.

அடிகள் நாகையில் படித்துக்கொண்டிருந்தபோது மாணவர்கட்குப் பற்றுண்டாகுமாறு 'இந்து மதாபிமான சங்கம்' ஒன்றைத் தோற்றுவித்தனர். அது பின்னர் நடைபெறவில்லை.

அடிகள் 1898 முதல் 1950 ஆகஃச்ட் 14ஆம்நாள் வரை நாட்குறிப்பு (Diary) ஒருநாள் கூடத் தவறுமல் எழுதியுள்ளனர். அவர்கள் எழுதியது ஆங்கிலத்தில்தான். தொடக்கத்தில் எழுதிய எழுத்துப்போல இறுதிவரை எழுத்து திருத்தமாக இருப்பது வியப்புக்குரியது. அவர்கள் 15-9-1950இல் இறையடி சேர்வதற்குமுன் ஒரு திங்கள் மட்டும் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடந்தமையால் நாட்குறிப்பு எழுதப் பெறவில்லை. அவர்களது வரலாறு எழுதுவதற்கு அது நன்கு பயன்படும். அதனை அச்சிடுவதாயின் செந்தமிழ்ச் செல்வியின் அளவில் ஏறக்குறைய 4000-ம் பக்கங்கள் வருமெனத் தோன்றுகிறது.

அடிகள் எழுதும் நூல்களுக்குரிய கையெழுத்துப் படிகள் அடித்தல் திருத்தல்கள் இல்லாமல் படிப்பவர்க்கும் அச்சுக் கோப்பவர்க்கும் மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் ஊட்டும் வகையில் தெளிவாக அமைந்திருக்கும். அடிகள் தம்முடைய மாணவர் கட்கும் அன்பர்கட்கும் அறிஞர்கட்கும் மக்கட்கும் அனுப்பும் கடிதங்களை ஆங்கிலத்திலோ தமிழிலோ தாம் எழுதுவார்கள். சொல்லி எழுதுவதில்லை. அடிகள் தமக்கு வரப்பெற்ற கடிதங் களைப் போற்றி வைக்கவில்லை. ஆனால், அவர்கள் பிறர்க்கு எழுதிய கடிதங்களை எழுத்தழகு, கருத்தழகு நோக்கிப் பெரும் பான்மையோர் பாதுகாத்து வைத்துள்ளனர். அப்படிப் பிறர்க்கு எழுதிய கடிதங்கள் பலவற்றைக் கழகம் தொகுத்து வைத்திருக் கிறது.

பொதுநிலைக் கழகம் :

ஆசிரியர் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும், வள்ளலார் இராமலிங்க அடிகளும் திருவுள்ளங்கொண்டருளிய (சீவ காருண்ய சமரச சன்மார்க்க நெறியை) உயிரிரக்க நிலைக்கொள்கையைப் பரப்புதற் பொருட்டு 1915 இல் அடிகள் தமது பல்லாவர மாளிகையில் சமரச சன்மார்க்க நிலைய (பொதுநிலைக் கழக)த்தை நிறுவியுள்ளனர். அதன் நோக்கங்கள் பின்வருமாறு :

க. எல்லா உயிர்களிடத்தும் உயிர் இரக்கத்தை விளக்கும் முகத்தால் கொலை நிறுத்தல், ஊன் உணவு விலக்கல்.

உ. எல்லாம் வல்ல கடவுள் ஒருவரே என்று வலியுறுத்து வதோடு அவரை அடைதற்கு அன்பு ஒன்றே வழியெனக் காட்டுதல்.

ங. ஏழைகட்கும் வலியற்றவர்கட்கும் உணவளித்தல், சிற்றுயிர்கட்குத் தீனி கொடுத்தல், எல்லா உயிரையும் கொடுமையாக நடத்துவதினின்றும் காத்தல்.

ச. பெரும்பாலும் மருந்தில்லாமல் நோய் நீக்குதல்.

ரு. மேலே கண்ட முயற்சிகளுக்கு முக்கியமான யோகம், மந்திரம் முதலிய கலைஅறிவுகளையும், நல்லொழுக்கங்களையும் கற்பித்தல்.

செந்தமிழ்க் கழகம் :

அதே 1915 ஆம் ஆண்டில் நன் மாணாக்கர்க்குத் தமிழ்க் கல்வியினையும், வேதாந்தம் சைவசித்தாந்தம் முதலிய சமய நெறிகளையும் கற்பிக்கும் பொருட்டுச் 'செந்தமிழ்க் கழகம்' ஒன்றை நிறுவுதல்.

அதன்வழி மூன்று வகுப்புக்களை நடத்துவதென்றும், முதல் வகுப்பு மூன்றாண்டுகாலம், இரண்டாவது வகுப்பு இரண்டாண்டு காலம், மூன்றும் வகுப்பு மூன்றாண்டு காலம் நடைபெறுமென்றும் அம் மூன்று வகுப்புகளிலும் நீதி நூல்கள், காவியங்கள், இலக்கணங்கள், தருக்க நூல்கள், சமய நூல்கள் ஆகியவற்றில் இன்னின்னவை* கற்பிக்கப் பெறுமென்றும் குறிப்பிட்டுள்ளனர்.

அடிகளார் வாழ்ந்த காலத்தில் பொதுநெறிக் கொள்கைகள் மட்டும் இடையிடையே பரப்பப்பட்டனவே யன்றிச் செந்தமிழ்க் கழகம் நடைபெற்றதாகத் தெரியவில்லை. பொருளுதவியும், அணுக்கத் தொண்டர்களின் ஒத்துழைப்பும் இல்லாமையே அடிகளுடைய சீரிய நோக்கங்கள் நிறைவேறாமைக்குக் காரணமாகும்.

பொதுநிலைக் கழகப் புத்தக விற்பனை நிலையம் :

அடிகள் சொற்பொழிவுகளைக் கேட்ட அன்பர்களும் பல்லாவர மாளிகையில் அடிகள் தொகுத்துவைத்திருந்த தமிழ், ஆங்கிலம், சமற்கிருத நூல்களைக் கண்டவர்களும் சொற்பொழிவுகளில் அடிகள் குறிப்பிட்டு வரும் ஆங்கில நூல்களிற் சிலவற்றையும் தொகுத்து வைத்திருக்கும் நூல்களிற் சில வற்றையும் வரவழைத்துத் தரும்படி அடிகளாரை வேண்டினமையால் தாமே பல்லாவர மாளிகையில் 'பொதுநிலைக் கழகப் புத்தக வணிக நிலயம்' ஒன்றை 1921 இல் தொடங்கினர். ஞான சாகரம் (அறிவுக்கடல்) 8, 9 ஆம் இதழ்களில் புத்தக விலைப்பட்டி ஒன்றை வெளியிட்டுள்ளனர். ஆனால், அடிகள் தாமே நூல் ஆய்வதும், நூல் எழுதுவதும் அதனை அச்சிடுவதும், வெளியே சொற்பொழிவாற்றச் செல்வதும் ஆகிய பணிகளை நிரம்ப மேற்கொண்டமையால் தாம் தொடங்கிய புத்தக வாணிகத்தை நடத்தமுடியவில்லையெனத் தெரிகின்றது.

அடிகளார் பிறர் கையெழுத்துப் படிகளைத் திருத்தியமை :

தமியேன் பள்ளி மாணவனாக இருந்த காலத்தில் 'பெண் கல்வி' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதியிருந்ததை அடிகளுக்கு அனுப்பித் திருத்தித் தரும்படி வேண்டினேன். அடிகள் அப்போது திருத்தித் தந்த கையெழுத்துப்படி அண்மையில் ஒரு கோப்பிலிருந்து கிடைத்தது. அடிகள் எவ்வளவு கருத்தூன்றி அதனைத் திருத்தியுள்ளார்கள் என்பது நன்கு புலப்படுகின்றது.

---

*கழகம் வெளியிடக் கருதும் 'அடிகள் கைவண்ணம்' என்னும் நாவின்கண் இவை குறிக்கப்படும்.

அடிகள் தம் அருமை மகள் நீலாம்பிகையம்மையாரும் மாணுக்கர்களிற் சிலரும் தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதிய கையெழுத்துப் படிகளைத் திருத்தியதுண்டு. அவற்றிற் சில வற்றை யான் கண்டிருக்கின்றேன். அடிகள் திருத்தங்கள் பலவாயிருப்பினும் முறைப்படுத்தித் திருத்தங்களோடு படிப் பதற்கு ஏற்றவகையில் திருத்தியிருப்பது அடிகட்கே உரிய தனி ஆற்றலாகும். அடிகள் எதனையும் ஏனோ தானோ என்று ஒரு போதும் செய்யமாட்டார். அடிகள் திருத்தியபின் கட்டுரை கருத்தழகும் மொழிவளமும் பெற்று இனிமை கொழிப்பதைக் கண்டு மகிழலாம்.

தமிழர் நல்வாழ்வுக்காகவே நூல்கள் எழுதியமை :

தமிழ்மொழி, தமிழர் வாழ்க்கை, தமிழர் சமயம், தமிழர் நாகரிகம், கலை, தமிழ்நாடு இவற்றின் தூய்மைக்கு மாற்றார் ஏற் படுத்திய மாசுகளைக் களைந்து எறியும்பொருட்டு. நுண்மாண் நுழைபுலமிக்க அடிகளார் தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகியவற்றில் வெளிவந்துள்ள நூல்களைத் திருந்தக் கற்றும் உய்த்துணர்ந்தும் நூல்கள் எழுதியுள்ளனர் என்றால் அது மிகையாகாது. அந் நூல்கள் வருமாறு :—

வேளாளர் நாகரிகமென்னும் தமிழர் நாகரிகம்.
பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்.
தமிழ்நாட்டவரும் மேல்நாட்டவரும்.
முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்.
சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்.
கோகிலாம்பாள் கடிதங்கள்.
அறிவுரைக் கொத்து.
தமிழர் மதம்.
மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி.
மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்.
சைவசமயத்தின் நெருக்கடியான நிலை.
பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம்.
கடவுள்நிலைக்கு மாறான கொள்கைகள் சைவமாகா.
சைவசித்தாந்த ஞானபோதம்.
சிவஞானபோத ஆராய்ச்சி.
திருவாசக விரிவுரை நான்கு அகவல்கள்.
அம்பலவாணர் திருக்கூத்தின் உண்மை.
மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை
அறிவுரைக் கோவை
உரைமணிக்கோவை

கருத்தோவியம் (அண்மையில் வெளியிடப் பெற்றது)
பல்பொருட் கட்டுரைகள் (அச்சிடப் பெறுவது)

மும்மொழிப் புலவராகவும், பல்கலைக் களஞ்சியமாகவும், கற்பனையுள்ளம் படைத்தவராகவும் பலவகை உரைநடை எழுதும் ஆற்றலுடையவராகவும் விளங்கிய அடிகள் எளிதிலே பொருளீட்டுதற்குரிய குறுங்கதைகள், நெடுங்கதைகள், பல் சுவைப் புதினங்கள் ஆகியவற்றை எழுதிப் பெரும்பொருள் ஈட்டியிருக்கலாம். ஆனால், அவர்கள் தமிழர் நல்வாழ்வுக் காகவே தோன்றியவர்களாதலால் அப்படி நூல்கள் எழுதிப் பொருளீட்ட விரும்பினார்களில்லை. அத் துறையிலும் அவர் களுக்கு ஒப்பாவார் எவ்ரும் இருத்தல் அரிது.

தனித்தமிழ் இயக்கம்:

1916 இல் தம் அருமை மகள் நீலாம்பிகை யம்மையாரோடு ஒருநாள் உரையாடுகையில் வள்ளல் இராமலிங்க அடிகளார் பாடிய பாட்டொன்றில், 'தேகம்' என்ற சொல்லைக் கண்டதும் ஏன் அதற்கு உடம்பு என்ற தூய தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தக் கூடாது என்று மகளார் கேட்க, அவ்வாறு தூய தமிழ்ச் சொல்லை அமைப்பதே பொருந்தும் என்று கூறி, அன்று முதல் சுவாமி வேதாசலம் என்ற தமது பெயரை 'மறைமலையடிகள்' என்று மாற்றிக் கொண்டனர். தம் மக்கள் மாணிக்கவாசகம், சுந்தர மூர்த்தி, திரிபுரசுந்தரி ஆகியோர் பெயர்களை, 'மணிமொழி', 'அழகுரு', 'முந்நகரழகி' என்று மாற்றி அழைக்கலாயினர். தம் மூத்த மகள்வயிற்றுப் பேரன் நடராசனை, 'அம்பல வாணன்' என்றும் பேத்தி ஞானம் என்பவளை 'அறிவு' என்றும் அழைத்தனர். தாம் நடத்திவந்த ஞானசாகரம் என்ற இதழுக்கு 'அறிவுக்கடல்' என்னும் தூய தமிழ்ப் பெயர் இட்டனர். தம் அணுக்கத் தொண்டராகிய கனகராயர் பெயரைப் 'பொன்னரசு' என்று மாற்றியமைத்தனர். அவ் வாறே தம் மாணுக்கர்கள் பெயர்களையும் மாற்றி அழைத்து வந்தனர். தாம் எழுதும் நூல்களையும் பிறமொழி கலவாமல் தூய தமிழிலேயே எழுதி வரலானார். தாம் முன்னமே பிற மொழிச் சொற்களைக் கலந்து எழுதிய நூல்களைத் திரும்ப அச்சிடும்பொழுது பிறமொழிச் சொற்கட்குத் தூய தமிழ்ச் சொற்களை அமைத்து அச்சிட்டு வந்தனர். இத் தனித் தமிழ்க் கொள்கையைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொடங்கிய கால முதல் கூடுமானவரை நூல் வாயிலாகவும், இதழ் வாயிலாகவும் தூய தமிழ் நடையினைப் பரப்பி வருகின்றது. அதன் பொருட்டு, அழைப்பிதழ் எழுது முறை, இல்லப் பெயர்

அகர வரிசை, மக்கட் பெயர் அகர வரிசை, வடசொல் தமிழ் அகர வரிசை ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளது.

தமிழர் நல்வாழ்வின் பொருட்டு அடிகள் ஆய்ந்து கடைப்பிடித்த அடிப் படைக் கொள்கைகள் :

க. மக்கள் முதன்முதல் தோன்றிய காலத்தில் பேசப் பட்ட மொழி தமிழே.

உ. தமிழ்மொழியே வடமொழியினும், உலகமொழிகளினும் மாண்புடையது. தமிழ்மொழிதான் 'இலக்கண வரம்புடைய செம்மையுடையது.

௩. தமிழர் நாகரிகம் ஆரிய நாகரிகத்தினும் முந்தியது; மேம்பட்டது.

௪. சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு முதலிய சீர்திருத்தங் களைப் போற்றியது.

௫. சாதி வேறுபாடு, சமய வேறுபாடு, இன வேறுபாடு கருதாமல் பழக வேண்டுமெனக் கூறியது.

௬. பிறப்பால் உயர்வு தாழ்வு கூறுவது தவறு எனச் சுட்டிக் காட்டியது.

௭. தனித்தமிழ் இயக்கங் கண்டது.

அ. தமிழர்களைச் 'சூத்திரர்கள்' எனக் கூறியதைக் கண்டித்து ஒழித்தது.

௯. தமிழர் மதம் சைவமும் வைணவமுமே என ஆராய்ந்து காட்டியது.

௧௰. 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை, அதிற்சார் சிவமாம் தெய்வத்தின் மேல் தெய்வம் வேறில்லை' என்பதை விளக்கியது.

௧௧. மூவர் நூலைப் பயிலுமாறு வற்புறுத்தியது.

௧௨. திருக் கோயில்களிலும், இல்லச் சடங்குகளிலும் தமிழ் மந்திரங்களை ஓத வேண்டுமென்றது.

௧௩. திருவள்ளுவர் ஆண்டு கண்டது—திருவள்ளுவர் திருக்குறளைப் பயிலுமாறு வற்புறுத்தியது.

௧௪. பலி விலக்கு, ஊன் விலக்கு, கள் விலக்குகளை வற் புறுத்தியது.

௧௫. நோயின்றி வாழும் முறைகளை விளக்கியது.

௧௬. நாடோறும் இல்லத்தில் வழிபாடு செய்யும் முறை யினை வகுத்துக் காட்டியது.

௧௭. போலி நூல்கள் எழுதிப் பொருளீட்ட விரும்பாதது.

கஅ. போலிப் புராணங்கள் இவையெனச் சுட்டிக் காட்டிக் கருத்தமைந்த நற்புராணங்கள் சிலவற்றைத் தழுவிக் கொண்டது.

ககூ. அரிய நூல்கள் பலவற்றைத் தொகுத்து நூலகம் அமைக்க வழிகாட்டியது.

உ0. சொற்பொழிவாளர்கட்குக் கைம்மாறு கொடுப்பது முறையாகும் என்பதற்கு வழிகாட்டியது.

உக. புலவர்களின் மதிப்பை உயர்த்தியது.

உஉ. தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தற்கு வழி காட்டியது.

உங. திருக்கோவில்கட்குச் சென்று வழிபாடு செய்தல், தேவாரம், திருவாசகங்களைப் பண்ணோடு பாடுதல் உய்தி பெறு தற்கு வழியாகும் எனக் காட்டியது.

உச. திருமணச் சடங்கினைத் தமிழ் மந்திரம் ஓதித் தாமே நடத்திக் காட்டியது.

மறைமலையடிகளாரைப்போல் தமிழர் நல்வாழ்வுக்கு வாழ்ந்து காட்டிய அறிஞர் பெருமக்கள் யாராவது உளரா என்பது ஆராய்வதற்குரியது. மனோன்மணீயப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் மனோன்மணீயத் தமிழ்த்தாய் வணக்கத் தில் சில குறிப்புக்களைச் சுட்டிக் காட்டியுள்ளனர் தம்முடைய சீர்திருத்தக் கருத்துக்கள் யாவும் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களிடம் உண்டு என்று அடிகளே ஒருமுறை என்னிடம் சொன்னார். ஆனால், பேராசிரியர் எழுதிய நூல்கள் அவற்றிற்குச் சான்று கூறும் எனினும் பிள்ளையவர்கள் வாழ்க்கை ஒரு நெறிப்படாமல் போயிற்று. மற்றும் பேராசிரியர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை, பொறியியலாளர் பா. வே. மாணிக்க நாயக்கர், கரந்தை உமாமகேசுவரம் பிள்ளை, நாவலர் சோம சுந்தர பாரதியார் முதலானோர் சீர்திருத்தக் கொள்கையில் ஈடுபட்டோர் எனினும் அடிகளாரோடு அவர்களை ஒப்பிடுவதற் கில்லை. அடிகள் தமக்கென எழுத்தரையோ, சுருக்கெழுத் தரையோ, தட்டச்சுப் பொறியரையோ, நேர் உதவியாளரையோ அமர்த்திக் கொள்ளவில்லை. எல்லாவற்றையும் செப்பமாகத் தாம் ஒருவரே செய்து வந்தமை வியப்புக்குரியது. அடிகள் பேரறிஞர் மட்டும் அல்லாமல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்போல் ஒரு பெரிய பல்துறை நிறுவனமாகவும் வாழ்ந்து காட்டினர் என்பது மேலே கண்ட குறிப்புக்களால் நன்கு புலனா கின்றதன்றோ? எனவே, தமிழ்மக்கள் அடிகள் நூல்களை யெல் லாங் கற்றுத் தமிழர் நல்வாழ்வுக்குத் தொண்டாற்றுவார்களாக!

———

வ. சு.





## 11. சீர்திருத்தம்

அடிகளார் வாழ்க்கையில் பல தலையான ஆற்றல்கள் மிளிர்ந்து தோன்றின. ஒவ்வொன்றும் வீறி விளங்கித் தலைமை பெற்றுச் சிறந்தன. எல்லாம் புரட்சி விளைத்து மற்றவர்க்குச் சீர்திருத்தங்களாய்த் திகழ்ந்ததோடு, நிலை கொண்டனவாயும் பெருமை பெற்றுவிட்டன. சங்க நூல்கள், சமய நூல்கள், கொள்கை நூல்கள், உலக நூல்கள், பன்மொழி நூல்கள், எல்லாவற்றின் அடிப்படைப் பெருங் கருத்துக்களையும் அகங்கொண்டு, பெரும் பெருந் திருத்தங்களாய்ப் பொலிவுற்றுவிட்டன!

1. உடலோம்பல் :

இதைப் பற்றிய திருத்தத்திற்கு வான், வளி முதலிய உலகப் பொருள்களும், மனம் முதலிய உட்கருவி விளக்கங்களும், இவ்வுடலமைப்புகளும், பிறவும் நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

உயிரின் இயல்புகளும் கடவுள் உணர்வும் அறிந்திருக்க வேண்டுவது முதன்மை.

இவ்வெல்லாப் பொருள் இயல்புகளோடு அவ்வவற்றின் இயற்கையான இயக்க முறைமைகளும் தெளிவு பெற்றிருந்தால் மட்டுமே உடலோம்பலில் நிலையான திருத்தம் காண முடியும், கண்டு தொடர்பாகப் பின்பற்றி நலமுற வாழவும் வாழ்விக்கவும் முடியும்!

அடிகளார் இயற்றிய பலவேறு பொருளியல் நூல்களில், 'மக்கள் நூறு ஆண்டு உயிர் வாழ்க்கை' என்பதும் ஒன்று; அதில் இவ்வியல்புகளெல்லாம் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

உடம்பின் பொருள்கள் நிலைகுலையாமலிருந்தால் மட்டுமே உடலோம்பல் செவ்வையாக நிகழ்ந்து வரும். மூப்பினல் நிலை தளர்தலை யாரும் தடுப்பதற்கு இல்லை. இருக்கும் வரையில், நோயின்றி இருப்பது இன்றியமையாதது. அதற்கான குறிப்புக்களெல்லாம் அந் நூலில் வருகின்றன.

நோய்ப்பட்டு அதனைப் பின்பு பெருமுயற்சியுடன் நீக்கிக் கொள்வதைவிட, நோய் வராமல் காக்கும் திருத்தங்கள் முக்கியமானவை; இது தமிழ் மறையிலும் வற்புறுத்தப்பட்டது.

உலகப் பொருள்களோடு உடம்பு இயங்குதல், ஒருவகையில் இயற்கையே அமைந்திருக்கின்றது; அதோடு உலகப் பொருள்களாகிய வான், வளி, நீர், தீ, மண் என்பவற்றையும் அவற்றின் திரிவுண்ட விளைபொருள்களையும் உட்கொண்டு கழிக்கும் முறை ஒன்று. இவ்விரண்டும் சரியான அளவில் இருக்கப் பார்ப்பதோடு அதற்கேற்ப அறிவு, விருப்பம், தொழில்கள் முதலியவற்றை அளவாய்ப் பயன்படுத்திக் கொண்டு அமைதியால் அருளுணர்வோடு வாழ்ந்து வருதலும் ஒரு திருத்தமாகும்.

இவையெல்லாம் ஒக்கப் பொருத்தும் முறையில் அடிகளார் உடலோம்பல் திருத்தங்களைத் தெரிவித்திருக்கிருர்கள்; இவ்வளவும் அமையாத ஏனையோரால் எத்திருத்தங்களையும் செவ்வையாய்த் தெரிவித்தல் இயலாது. அவர்களிடம் சீர் திருத்தங்களை எதிர்பார்த்தலும் முறையன்று!

'மருந்து' என்னும் அதிகாரத்தில் திருவள்ளுவர் இயற்கை மருத்துவமே விளக்கியிருக்கின்ருர். அதற்கு அவர் எவ்வளவு உள்ளுணர்வு மிக்க மேதையாய் விளங்கியிருக்கவேண்டும்! எல்லார்க்கும் இயலுமா? சொல்லுவதைக் கிளிப்பிள்ளைபோல் சொல்வது வேறு!

உண்ணும் உணவுப் பொருள்கள் பொருத்தமாய் இருந்தால் உயிருக்கு ஊறுபாடு ஏதுமில்லை. மருத்துவர் உணவுகளின் சாறுகளைத் திரட்டியே நீருகவும், நீராளமாகவும், கிண்டிய பொருளாகவும், மாத்திரைகளாகவும், மற்ற வடிவுகளிலும் தருகின்றனர்.

உலகத்தில் உள்ள மரஞ்செடி கொடிகளின் வேர்கள், பட்டைகள், இலைகள், அரும்புகள், மலர்கள், விதைகள் போன்ற மரக்கறிப் பொருள்கள் பலவற்றின் இயல்புகளையும் ஆற்றல்களையும் இன்னும் மக்கள் சரியாக அறிந்துகொள்ளவில்லை.

மேற்கு மலைத்தொடர், மறைந்து போன மந்தர மகேந்திர மலை, விந்தியமலை, பனிமலை முதலிய மலைகளிலும் இடையிடையே விளங்கும் குன்றுகளிலும் எத்தனையோ வகையான மரஞ் செடி கொடி வகைகளின் மருந்தாற்றல்கள் நிரம்பியுள்ளன. பூதப் பொருள்கள், உலோகப் பொருள்கள், கறி காய்ப் பொருள்கள் முதலியவற்றில் அமைந்திருக்கும் மருந்தாற்றல்களுக்கும் ஒரு கணக்குண்டோ? அவற்றிலெல்லாம் நூற்றில்

இரண்டு மூன்று பங்குகூட உயர்ந்த மருத்துவராலும் இன்னும் அறியப்படாமல் உள்ளன.

இப்போது காணப்படும் இயற்கை மருத்துவம் அல்லாத அயல் மருத்துவ முறைகள் பெரும்பாலும் ஊன் பிழிவுகள் கலந்து பலவேறு வகையில் இடர்விளைத்து வருகின்றன. ஆண்டுதோறும் மருத்துவர் மிகுந்தே வருகின்றனர்; நோய்களும், புதியன புதியனவாய் வேறு வேறு பெயர்களில் மிகுந்து வருகின்றன. 'பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்' என்னும் அடிகளார் நூல், அனைவராலும் இங்கே கருத்தூன்று தற்குரியது!

இக் கால மருத்துவரிற் பெரும்பாலோர், நோய்கள் வருமுன் அவை வாராமைக்குரிய வழி முறைகளையும் எடுத்துக் காட்டுகின்றவராயில்லை; வந்தபின் நீக்கும் முறைகளும் நோயாளருக்குத் தெரிய விடுவதில்லை; காலம் மாறிப்போயிற்று! அறிவு, காரணங்களைத் தேடுகின்றது.

மருத்து நூல்கள், மருத்துவர் படிப்புக்கே பெரும்பாலும் இயற்றப்பட்டிருக்கின்றன; மக்கள் தெளிவுக்கு இல்லை. ஆனல், அடிகளார் நூல்கள் மட்டும், பொதுமக்களின் நலங்கருதி அவர்க்குப் பயன்படும் வகையில் இயற்றப்பட்டிருக்கின்றன. அவற்றை வாங்கிப் படித்து அனைவரும் நலம் எய்துதற்குரியர். 'எந்த நூல்களை எப்படிப் பயன்படுத்துதல் வேண்டும்? எவை என்ன மதிப்புக்குரியன?' என்று நாடு அறிந்து கொள்வதும் போற்றிக் கொள்வதும் ஒரு நாட்டின் வளர்ச்சியைக் காட்டு மல்லவா ?

அடிகளார், வாழ்க்கையில் விளங்கியபோது, நூல்கள்மட்டு மன்றி அன்பர்களுக்கு எழுதும் பெரும்பான்மைக் கடிதங்களிற் கூட உடலோம்பலின் முதன்மையை இயற்கை மருத்துவ முறைகளாலும் தவ முறைகளாலும் தெரிவித்து வருவார்கள்.

எமக்கு எழுதிய எத்தனையோ கடிதங்களில், மறக்க முடியாதபடி இவ்வன்புச் சிறப்புகள் காணப்படும்.

ஒரு முறை யாம் பெரியம்மை வார்க்கப்பட்டுப் படுக்கையில் கிடந்தேம்; எமக்கு ஆண்டு அப்போது இருபதுக்குள் இருக்கும். அந் நிலையில் யாம் கையாள வேண்டிய முறைகளையெல்லாம் தொகுத்து, அடிகளார் தெரிவித்து வந்தார்கள். சூழலில் உள்ளோர் குளிர்ந்த பண்டங்களை உண்ணக் கொடுப்பார்கள்; அவற்றை நீ உண்ணுதே! என்பது அவற்றுள் ஓர் அறிவுரை. மற்றெரு முதன்மையான அருளுரை, திருமுறைகளை நாளும்

ஓதிக்கொண்டு, முழு முதல்சிவத்தையே தேனித்துக் கொண்டிரு; மாரி முதலான சிறு தேவதைகளை உன்னுதே என்பது.

திருஞானசம்பந்தர்க்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் வாய்த்தது போல், அடியேமுக்கும் திருக் கலியாணசுந்தரம் என்னும் பாடல் மாணவர் ஒருவர் அமைந்திருந்தனர். திருத்தலங்களுக்குச் செல்லும்போதெல்லாம் அவர் உடன் வந்து பாடல் தொண்டு புரிவார். பெரியம்மை வார்க்கப்பட்டிருந்த காலங்களில், ஒவ்வொரு நாளும், இடையருமல் அருகில் இருந்து கொண்டு திருமுறைப் பாடல்களை இசை முழக்கி இனிது ஓதி வந்தார். முழுமுதற் சிவம் பற்றிய இத் தெய்வ உணர்வு மிகப் பெரிதும் அருள் சுரந்து நலம் விளைத்தது; பலரும் அஞ்சியது போல் உடம்பில் வடுவே விழாமலும், பெரியம்மை வார்த்த அடையாளமே இல்லாமலும், கண் முதலியன சிறிதும் பழுதாகாமலும், சுருங்கிய நாளில் அப் பெரியம்மை இறங்கி நீங்கியது. இங்ஙனம் அடிகளாரால் நலமுற்ற அன்பர்கள் எத்தனையோ பேர்! செய்திகள் எத்தனையோ பல.

ஒன்று மட்டும் இங்கே அவர்கள் கடித வடிவிலேயே எடுத்துக் காட்டலாம். ஒருகால் எம் துணைவியார்க்கு சூடு மிகுதியாகித் தொடர்பாக நோய் உண்டாக்கியது; அடிகளார் இதனை எப்படியோ அறிந்து கொண்டனர். அப்போது அவர்கள் எழுதிய கடிதம் முழுவதும் நினைந்து நினைந்து நெஞ்சு நெகிழ்தற்குரியதாய் இருக்கிறது. பல்லாவரத்திலிருந்து இதனை எழுதியிருக்கிருர்கள்.

இக் கடிதத்தைக் கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்கள் பார்த்தவுடன் மிக அழகாக அட்டை இட்டுக் கட்டுச்செய்து அன்புடன் அளித்துப் பத்திரமாய் ஓம்பி வரப் பரிவுரை கூறினர். இங்ஙனம் எத்தனையோ பல நிகழ்ச்சிகள்! தமிழகம் முழுதும் அன்பர்களின் உடலோம்பலில் அடிகளார் காட்டிய ஆர்வமும் அன்பும் அருளும் திருத்தங்களும் இணையற்றவை!

2. உள்ளம் ஓம்பல்:

உட்கருவிகளின் பொருளியல் இதற்குத் தெரிந்திருக்க வேண்டும். அக் கருவிகளின் கீழ்நிலைகளைச் (கீழாலவத்தையைச்) சேராமல், எல்லாக் கருவிகளோடும் மேல்நிலையிற் சேர்ந்திருக்கிற விழிப்பு நிலையிலேயே (சகலாவத்தையிலேயே) மேல் மேல் நுட்பங்களைப் பழக்கத்தால் தெளிந்திருக்கவேண்டும்.

உட்கருவிகளையெல்லாம் மனம் என்னும் ஒரு சொல்லாலேயே குறிப்பிடுவதும் உண்டு.

கருவிகளின் பொருளியல்புகளை மட்டும் அறிந்திருக்கிற நிலையோடு, அவற்றின் ஆற்றல்களிலும் பழகியிருக்கவேண்டும்; இதனை மனவல்லமை என்று சொல்லலாம்.

மனம் முதலிய கருவிகளின் இயல்பை அறிந்திருப்பது வேறு, மன வல்லமையிற் பழகியிருப்பது வேறு. இக் காலப் பல்கலைக் கழகப் பெரும் படிப்பாளிகள் மனம் முதலிய பொருளியல்புகளை அறிந்திருக்கிறார்கள்; ஆனால், மன வல்லமையிற் பெரும்பாலோர் பழகியிருக்கவில்லை.

'யோக நித்திரை' யென்னும் அறிதுயில் (Hypnotisam), மனக் கவர்ச்சி என்னும் 'மனித வசியம்' (Personal Magnetism) தொலைவில் உணர்தல் (Telepathy) முதலிய மனப் பழக்கங்களைப் (Communication between mind and mind) பல்கலைக் கழகப் படிப்பாளிகளில் பலர் அறிந்திருக்கின்றனரா? மருத்துவர்களிற் கூடப் பெரும்பாலார் உளநூல் (Psycology, The Science of Mind) அறிந்திருப்பார்களே யன்றி மன வன்மையிற் (Psychical power) பலர் பழகியவர் அல்லரே.

அடிகளார் இயற்றிய நூல்கள், மன ஆற்றலைப் பலர்க்கும் விளைத்து, அதன் வாயிலாக, விழிப்பு நிலையிலேயே 'தூங்காமல் தூங்கும்' பழக்கமும், 'தெளிவுக் காட்சி' என்னும் பழக்கமும் மக்களுக்கு உண்டாக்குகின்றன! இவற்றால், 'மறைபொருள் நுட்பங்கள்' 'எதிர்கால நோய்கள்' முதலியன கண்டு, அவை தீர்த்துக் கொள்ளுதற்குரிய எளிய இயற்கை முறைகளையும் அடிகளார் விளக்குவர். X-Ray முதலான கதிரொளிகளைக் கருவிகளில்லாமலேயே காணும் பேறு, இதனால் மக்களுக்கு வாய்க்கின்றது! விஞ்ஞானமெல்லாம் இக் காலத்தில் கருவிகளுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றன; அவை வியப்புக்குரியன எனினும் இயல்பல்லாதன; செலவு முதலியன வாய்ந்தன; பொருளியல் சீர்கேட்டிற்கும் அச்சம் முதலிய விலங்கியல்புகளுக்கும் உரியன. ஓரளவு விஞ்ஞான உணர்விருப்பின் வாழ்வியல் வளத்துக்கு உதவியாயிருக்கக்கூடும்; மெய்ஞ்ஞானச் சிறப்பே எல்லாச் செழுமைகளுக்கும் வித்து. உலகம் சீர் திருந்திய நிலையிற் சிறக்கும்படி விரைவில் இறைவன் அருள் புரியக்கூடும்.

காற்றுக் குழாய்க்குள் சென்றுவிட்ட காற்றும்; நெஞ்சக் குழாய்க்குள் நுழைந்துவிட்ட குருதியும், உணவுக் குழாய்க்குள் புகுந்துவிட்ட உண்பொருள்களும் உள்ளே என்ன ஆகின்றன என்பது பொதுவாக மக்களுக்குத் தெரிவதில்லை; இவற்றையெல்லாம் 'மனவல்லமை'யின் நுட்பங்களாகிய தெளிவுக்

காட்சி முதலியவற்ருல் இனிது தெரிந்து, திருத்தங்களை மேற் கொள்ளலாம்.

எல்லாக் கருவிகளோடும் உயிரறிவு கூடி இருக்கும் இடம் புருவநடு! அதனை மனக்கண் அல்லது நெற்றிக் கண் என்பர். அது மேல்நோக்கியிருக்கும்; 'நோக்குதல்' 'ஆழ்ந்து நோக்குதல்' 'உற்று நோக்குதல்' 'உறுத்து நோக்குதல்' 'வேறின்றி நோக்குதல்' ஆகிய 'நனவு' 'கனவு' 'உறக்கம்' 'பேருறக்கம்' 'உயிர்ப்படக்கம்' என்னும் 'சாக்கிரம் சொப்பனம்' முதலிய ஐவகை நிலைகளால் அடிக்கடித் தேனித்து, நெற்றியி லிருந்து உச்சிவரையில் இம் மனக்கண் வல்லமையை அடைய லாம். இவையெல்லாம் மேற்கூறிய நூல்களில், அடிகளார், இயற்கைத் திருத்தங்களாக விளக்கியிருக்கிருர்கள். இப் புரட்சி வாழ்க்கைக்கு மிக இன்றியமையாதது! இதனை 'மத்தியால வத்தை' அல்லது 'வித்தியாதத்துவக்'காட்சிகள் (மிசிரமாயா தத்துவத்தர்சனம்) என்று சாத்திரம் பகரும். 'சிவஞானபோத ஆராய்ச்சி'யிலும் 'நூருண்டு உயிர் வாழ்க்கை'யிலும் மேற் காட்டிய தவமுறை நூல்களிலும் கண்டு தெளிய வாய்ப்பிருக் கின்றது. முதலில் பிறரை நிறுத்தப் பழகி உடனுக்குடன் தம்மை நிறுத்தவும் பழகிக் கொள்ளலாம்.

3. உணர்வு ஓம்பல் :

இஃது உச்சிக்குமேல் தூய முதல்களில் (தத்துவங்களில்) உலாவரும் ''சுத்தாவத்தை''யாகிய ஐவகை நிலைகளைக் குறிப்ப தாகும். இதனை அடைவோர் தமது உடம்பை ஞான உடம் பாகவும், தூய சிறப்புடம்பாகவும், வெளி உடம்பாகவும், ஒளி யுடம்பாகவும், ஒலி உடம்பாகவும் மாற்றிக் கொள்ளும் உயர்ந்த திருத்தங்களை எய்துவர். ''வானத்தின்மீது மயில் குயில் ஆச்சுதடி'' என்னும் திருவருட்பா, சாதாக்கிய வெளியின்மீது ஒளி ஒலியுடம்புகளாதலை உருவகத்தாற் குறித்து மகிழ்ந்தமை இங்கு நினைவுகூர்தற்குரியது!

இதற்கு, இவ் வுடம்பிலேயே தூய பொருள்களாயுள்ள எழுத்தொலிகளைப் ('பீசாட்சரங்கள்' 'மந்திர ஒலிகள்' திருமுறைப் பாடல்களைப்) பயன்படுத்துதல் வேண்டும்.

நமது உடம்பில் வெளியே வந்து உள்ளே செல்லுவது ஒரே ஒரு பொருள். அது 'மூச்சு' எனப்படும். இதன் மூலம் 'அண்ட பிண்டங்'களின் அனைத்து நலங்களையும் அடைய நம் முன்னேர் அறிந்திருந்தனர். அதை உள்வாங்கினுல் காற்றுப் பையில் செல்வதோடு மூலப்பகுதிவரையில் நடமாடும்; நாம் பேசும்போது பேச்சுடன் மூச்சும் வருதலை அறிவோம். மூலப்

பகுதி வரையில் சென்ற மூச்சு உடனே வெளிவந்து விடாமல் சிறிது நேரம் நிற்குமானல் (பிராணுயாமம்) அஃது இரண்டு மூக்குகளிலும் (நடு நாடியில்) ஒலி ஒளிகளை ('மூல குண்டலியை' 'மின் வல்லமையை') எழுப்பிக் கொண்டு மேல் உயரும். உள்ளிருந்து வெளியே வருவதும் உடம்பெங்கும் விசிறுவதும் ஒலி ஒளிகளாகிய இந்த அருள் மின்னலே!

அழுக்கு மிக்க (அசுத்தாத்துவா; ''அசுத்த மாயை') நமது உடம்பில் தூய பொருளாய் (சுத்தாத்துவா, சுத்த மாயை) உள்ளது விந்து நாதம் என்னும் இவ் ஒலி=ஒளிகளே!

எழுத்துக்கள் நாதம் உடைமையோடு மின் வடிவும் உடையவாகும். ஆதலால் தேவார திருவாசகங்களாகிய அருள் மின் ஒலி ஒளிகள், மிகவும் தூயவை ஆகும். அவற்றைப் பற்றிக் கொண்டும் திருவைந்தெழுத்தாகிய சிவ மந்திர அருள் மின்னலைப் பற்றிக்கொண்டும் மேல் எழுந்தால், பாடலோடு ஆடலாகிச் 'சுத்தாவத்தைகள்' ஏற்படும்; விளையும்! இதனல், தேவார திருவாசகங்களாகிய திருமுறைப் பாராயணம், 'சுத்த தத்துவங்க'ளோடு ஒன்றுதலாய்ச் 'சுத்தாவத்தை'யை அடைய உதவுகிறது என்பதில் தெளிவு இருக்கவேண்டும்.

இந்த நுகர்வு உச்சிக்குமேல், உயிரும் சிவமங்கையும் உலவும் மிகு நுட்பமான அருள் மின்வெளித் திருநடனமாகும். சுத்தமாயையில் உரிமையோடு திகழும் சோதியின்பமாகும்; ''தொடக்கெலாம் அறுத்த நற்சோதியின்பமே'' என்னும் திருவாசக மெய்யுணர்வு நிலை இங்கே உணர்தற்குரியது!

பொதுவாக, மக்கள் பாராயணம் பண்ண வேண்டும் என்பது, இங்ஙனம் 'சுத்தத்'தோடு பழகுவதற்கே ஆகும். உச்சிக்கு மேற்பட்ட இத் தேனிப்புப் பழக்கத்தால், தூய ஞானமும் (சுத்த வித்தை), தூய தலைமையும் (ஈசுரம்), வெளி ஒளி, ஒலி உடம்புகளும் (சாதாக்கியம்), தூய மின்னலும் (விந்து), தூய அமிழ்தமும் (நாதம்) மக்கள் அடைவர்.

சாதாக்கியத் தத்துவம் 'மணி' எனப்படும்; விந்து தத்துவம் 'மந்திரம்' எனப்படும்; நாத தத்துவம் 'அமிழ்தம்' எனப்படும். மணி மந்திர ஒளடதங்களாகிய சுத்தாவத்தைகளை, உயர்வகைத் தேனிப்பால் பெற்று, உடல் நலம், உள்ள நலம், உணர்வு நலம், முதலியன எய்துதல் எவ்வளவு சிறப்பான 'சீர்திருத்தம்' என்பதைச் சற்று எண்ணிப்பார்மின்! எண்ணிய எண்ணியாங் கெய்துப, எண்ணியார் திண்ணிய (நிட்டாதிப)ராகப் பெறின்!

இத் திருத்தங்களெல்லாம் 'சிவஞான போத ஆராய்ச்சி' 'சைவசித்தாந்த ஞானபோதம்' 'நூருண்டுயிர் வாழ்க்கை'

முதலியவற்றில் அடிகளார் விளக்கிய பற்பல உண்மைகள் கொண்டு இனிது தெளியலாம். எடுத்துக் காட்டுகளுடன் விளக்குவதானால் இச் சிற்றுரை மிக விரியும்.

அருள் ஓம்பல் :

அகமுகமான இத் திருத்தங்களில் அன்ருடம் பழகி வருவோர்க்கு, 'அருள் நலம்' என்னும் திருத்தத்தை அடிகளார் விளைத்திருக்கின்றனர். உயிரின் அன்பை இறைவன் அருள், முழுமுதற் சிவத்துடன் (செம்மை நலத்துடன்) ஒன்று சேர்த்து ஒன்றுவித்து வேறின்றி யுணரும் மிகுதூய 'அத்துவிதப்' பேரின்ப வீடுபேற்றை விளைக்கும் பெருநலம் இது! அந் நிலையில் உதவும் அருந்துணையாகிய சிவசத்தி அமிழ்தத்தை என்னென்பது! 'வான் புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும் பொருந்தணைமேல் வரும் பயனைப் போக மாற்றிப் (பத முத்திகளைக் கடந்து) பொது நீக்கித் தனையுணர வல்லார்க்கு என்றும் பெருந்துணையைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்பது இன்னுஞ் சிறிது மேம்பட்டிருந்தால், அவர்களை இங்கே இவ்வளவு அருகிற் காணும்பேறு நம்மனோர்க்குக் கிட்டுவது மிக அருமையாயிருந் திருக்கும்!

இவ்வளவு திருத்தங்களில் அடிகளாரது வாழ்க்கை யாற்றல் மின்னிக்கொண்டு இருந்ததனால், பெரும்பாலும் அவர்கள் தனிமையும், வாய் வாளாமையும், நோன்பும், உருக்கமும் உண்மையும் மேற்கொண்டவர்களாய் இருந்தார்கள்! இவ் வருமைகளையெல்லாம் அறியாதவர்களுக்கு, அடிகளாரின் உள் ளுணர்வு நிலைகள் சற்றும் விளங்குவதில்லை. உயர்ந்த தமிழும், உயர்ந்த கொள்கைகளும் உயர்ந்த திருத்தங்களும் இவற்றின் விளைவுகள்! ஆதலால் இப் பெருநிலையை எய்தாதவர்கள் எங்ஙனம் தமிழ்ச் சுவையும் ஞானச் சுவையும் பெற மாட்டுவர்? தமிழின் இலக்கண நுட்பங்களும் இலக்கிய ஒட்பங்களும் எங்ஙனம் அடைவர்? உயர்ந்த சுவைநடை அவர்களுக்கு எவ்வாறு கைவரும்?

ஒருகால், திரு. வி. க அவர்களுடன் எளியேம் அளவளாவி யிருக்க நேர்ந்தது; அப்போது அவர்கள், 'காண வேண்டும்' 'செய்ய வேண்டும்' என்பன போன்ற மிக எளிய தமிழ்த் தொடர்கள் சிலவற்றை எடுத்து மொழிந்து, 'இவற்றின் இலக் கணம் என்ன' என்று கேட்டார்கள். 'காணல் வேண்டும்' 'செய்யல் வேண்டும்' என்று அடிகளார் எழுதிவரும் தொட ரமைப்புகளின், தூய்மை, ஒட்பம், அழகு, சுவை முதலியனவெல் லாம் அப்போது விளக்க முற்றன. அதனையெடுத்து அவர்

களிடம் சொல்லும்போது, அடிகளார் அவ்வாறு சுவையுணர்ந்து அச் சுவையை இழவாமல் எழுதுவதற்கு, அவர்கள் உள்ளுணர்வுத் தேனிப்பே காரணம் என்பதை மிக ஆர்வமாய் விளக்கினர்கள்; பிறர்க்கு அச் சுவை தெரியவில்லை யென்றால், அவர்கள் புலமை அருட் புலமையாய் விஞ்சிச் செல்லாமையே அதற்குக் காரணம் என்பதையும் உடன் தெளிவித்தார்கள்! அன்பர்களை மேன்மேல் அன்பராக்குதற்கு ஈது எவ்வளவு உதவியாயிருக்கும் நோக்குமின்! 'மெய்யடிமை' 'மெய்த் தொண்டு' என்பது ஈதன்றே.

புறம் ஓம்பல் :

வாழ்க்கை அகம், புறம் எனப்படும். ஒவ்வோர் இயற்கைப் பொருளுக்கும் உட்புறம், வெளிப்புறம் என்று இரு பக்கமும் உண்டு. பழத்துக்கு உட்புறம் சாறும், சதையும், விதையும் இருக்கும். வெளிப்புறம் அவற்றின் வெளிப்பாட்டு நிறமும், பாதுகாப்புத் தோலும், ஊட்ட வழிகளும் இருக்கும். உட்புறத்துக்காக வெளிப்புறமே யன்றி வெளிப்புறத்துக்காக உட்புறமன்று.

மேலும் உட்புறம் முக்கியக் கருவிகளும், இயக்கங்களும் இருக்கும். கடிகாரம் உட்கருவிகளில்லாமல் புறத்தே மணிமுள் இயங்காது.

இந்த உடம்பை எடுத்துக்கொண்டால் உட்கருவிகளும், வெளிப் புலன்களும், புறப் பொருள்களும் உள்ளன. புறப் பொருள்களாகிய உலகப் பொருள்களை வாங்கி உள்ளே அனுப்புவதற்காக உடம்பில் இடை நடுவாகப் பொறி புலன்கள் உள்ளன. மற்றப்படி, அகமும் புறமுமே வாழ்க்கை நிகழ்ச்சிகள்! அவற்றின் அகமே முக்கியம். புறம் அதற்காகவே உள்ளது.

புறப் பொருள்களில் மிக உயர்ந்தது மின்னாற்றல்; அகப் பொருள்களில் மிக நுட்பமானது உணர்வாற்றல்!

உணர்வின் வளர்ச்சிக்காகவே புறத்து மின் உள்ளது. புற நாகரிகம் எல்லாம் மின்னாற்றலை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அக நாகரிகமெல்லாம் உணர்வாற்றலை முதன்மையாகக் கொண்டுள்ளன.

விஞ்ஞானிகள் இதுவரையிற் கண்டுபிடித்த பொருள்களில் மின் ஆற்றலாகிய ஒலி, ஒளி இயக்கங்களே உயர்ந்தவை. மெய்யுணர்வு நூலார் இதனை 'நாத' 'விந்து' எனவும், 'சிவம்' 'சத்தி' எனவும் கூறுவர்.

அக உணர்விலும் சிவம் சத்தியே மேம்பட்டிருக்க வேண்டும். புறத்தில் நாதவிந்து நுண் இயக்கமாகவும் அகத்தில்

சிவம் சத்தியாகவும் சுத்தமாயையும் இறை திருவருளும், உயிர்களின் நலத்துக்காக இயங்கி வருகின்றன.

சீர்திருத்தம் என்பவை இந்த அடிப்படையில் நடைபெறு விட்டால், அஃது இயற்கையாகாது.

முதல் திருத்தம், அகத்தும் புறத்தும் நிழலாடும் திருவருள் ஒளியாகிய மின் இயக்கத்தின் அடிப்படையில் நிகழ வேண்டும். அந்த மின் இயக்கமே 'எழுத்து' என்னும் கல்வி கலை மின் திருத்தங்கள்!

'நாதம்' என்பது, எழுத்தின் நாதங்கள்; 'விந்து' என்பது எழுத்தின் வடிவுகள். இவை ஒலி, ஒளி எனப்படும். 'சாதாக்கியம்' என்பது, இவற்றின் இயக்கம்; 'ஈசுரம்' என்பது, இதனால் உண்டாகும் தலைமை நிலை; 'சுத்த வித்தை' என்பது, இத் தலைமையால் விளக்கப்படும் குருஞான நிலை.

இங்ஙனம் மாமாயை எனும் தூமாயை (சுத்த மாயை) அகத்தும் புறத்தும் மின் இயக்கமாய், ஒலி ஒளி எழுத்துக்களாய்ப் பயன்படுகின்றன.

இந்த அடிப்படையில், கல்வித் திருத்தம் அமைந்துள்ளது. நாட்டின் நாகரிகமாய், முதல் சீர்திருத்தமாய் அமைகின்றது.

இதனை நன்குணர்ந்தவர் அடிகளார். அதனால் அவர்கள் கல்வித் திருத்தத்தை நாகரிக அடிப்படைத் திருத்தமாகவும் முதல் திருத்தமாகவும் அறிவுறுத்தினர். புரட்சித் தலைவராகிய 'மாஸ்கோ லெனினி'ன் அடிப்படைத் திருத்தமும் இதுவே! கடவுள் தலைமையையும், ஞானத்தையும் விளக்க வந்த தமிழ் மறைக்குரவர், முதலிரண்டு திருக்குறளிலேயே அவற்றைப் புலப்படுத்திக் "கற்றதனால் ஆய பயனென்கொல்?" என்று அருளிச் செய்து, அகவுணர்வின் ஈடுபாட்டில் அனைவரையும் தெளிவித்தார். கல்வியும் கலையும் மெய்யுணர்வுமாய் இங்ஙனம் புறத்து மின்னலும், அகத்து மின்னலும் முதல் திருத்தமாய்ப் பயன்படுகின்றன. சங்க நூல்கள் சமய நூல்கள் முதலிய பலவும் இக் கல்விச் சிறப்பையே அடிப்படை கொண்டுள்ளன;

> "அன்ன யாவினும் புண்ணியங் கோடி
> ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறி வித்தல்"

என்பது எவ்வளவு உண்மை சிறந்திருக்கிறது!

இவ்வடிப்படைக்கு மேல், சாதி, குலம், தொழில், தீண்டாமை பற்றிய உலக திருத்தங்களும் இவற்றில் வேறுபாடில்லாமற் கொண்டும் கொடுத்தும், திருமணம் அமைந்து குடி குடி

ஈசர்க்கு ஆட் செய்தல் முதலிய அனைத்துச் சீர்திருத்தங்களும் படிப்படியே எழுந்து ஒரு பொது நிலையை விளைத்தன.

பெரிய புராணத்தின் திருத்தொண்டர்கள் இத்தகைய பொதுமைத் திருத்தமும் உடையவர்கள்! எல்லாம் மின் சிதறல்களே! ஆதலின், அவர்களெல்லாம் பொதுமக்களினும் மேம்பட்ட சிறப்புமிக்க சோதி அடியார்கள் ஆனார்கள். ஈசனுக்கு அன்பும், எவ்வுயிர்க்கும் அன்பும் ஆகிய உணர்வுமின்னல் அவர்களிடம் சிறந்திருந்தது. எளிய வேறுபாடுகளெல்லாம், அவர்களிடத்தில், அவர்கள் பெரிய நோக்கத்தில், முற்றிலும் நீங்கிப் பொதுமைகளாய் விளங்கின.

'சோதி' என்பது அக்கினியன்று; மின்னொளியே அவ்வாறு கூறப்பட்டது; அக்கினி வேறு, மின் வேறு;

இனி, இப் பொதுமையாகிய மின்னிலிருந்து அதன் தனிமையாகிய 'சிவம்' என்னும் செம்மையை அடைதற்கும் உரியவர், அடியார் பெருமக்கள்! நால்வர் சமயகுரவர் இப் பொதுமையிலும் தனிமையிலும் நன்கு ஊறியவர்கள்!

கருத்தற்ற வேறுபாடுகளைத் தவிர்க்கும் சீர்திருத்தங்களால் பொதுமையடைந்து, பின் அதிலிருந்து, சிவத்தின் தனிமையில் ஊறி நிற்க வழிகாட்டியவரே நால்வர் குரவர்! அந்த அருமைப்பாட்டை அறிவதன்றோ, சீர்திருத்தம் என்பது! எளிதான உலகியல் சீர்திருத்தங்களையே வானளாவ உலகம் கரைந்து கொண்டிருக்கிறதே!

"பொதுநீக்கித் தனை உணர வல்லார்க்கு என்றும் பெருந்துணையை" என்பது அப்பர் தேவாரம்.

———

## கோயில் வருவாயினைப் பயன்படுத்தும் வழிகள்

*சில கோயில்களில் வரும் ஏராளமான வரும்படியிற் கோயிலின் இன்றியமையாச் செலவுகளுக்குப் பயன்படுத்தப் பட்டனபோக, மிச்சத்தைத் தேவார பாடசாலைக்கும், தனித் தமிழ்ப் பாடசாலைக்கும், சைவசித்தாந்த சபைகட்கும், தமிழ் சைவசித்தாந்த முணர்ந்த ஆசிரியர்க்கும், தமிழ் நூல் எழுதுவார்க்கும், சைவசித்தாந்த விரிவுரையாளர்க்கும், கோயிலைச் சார்ந்த சத்திரம் சாவடிகட்கும் பயன் படுத்தல் வேண்டும்.*

*—மறைமலையடிகளார்*

*(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை, பக். 197-198)*

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(முன் இதழ் ௰௪ஆம் பக்கத்தொடர்ச்சி)

முல்[4]—பொருந்தற் கருத்து வேர்ச்சொல் (தொடர்ச்சி)

முட்டடி = அண்மை. (W.). முட்டுதல் = நெருங்குதல். முட்டத்தட்ட = கிட்டத்தட்ட.

முட்டடித்தல் = கோலியாட்டில் தோற்றவனுடைய முட்டில் (விரற்பொருத்தில்) வென்றவன் கோலியாலடித்தல்.

முட்டடைப்பான் = வயிற்றை வீங்கச் செய்யும் மாட்டுநோய். (M. cm. D. I. 248).

முட்ட = முடிய, முற்ற. "முட்ட நித்தில நிரைத்த பந்தரின்" (பாரத. கிருட். 103).

முட்டத்தட்டுதல் = 1. மரத்திலுள்ள பழங்களெல்லா வற்றையும் பறித்தல். 2. முழுதும் இல்லா திருத்தல். (உ. வ).

முட்ட முடிய = முற்றிலும் முடிவுவரை. முட்ட முடிபோக = இறுதிவரை.

முட்டு—முட்டம் = மதி முட்டுப்பாடு (மதிக்குறைவு) ஆகிய மடமை.

முட்டம்—முட்டன் = மூடன். (W.).

முட்டத்தனம் = மூடத்தன்மை. (W.).

முட்டாட்டம் = (W.). 1. முட்டாள் தன்மை. 2. அறியாமையா லுண்டாகுஞ் செருக்கு. அவன் முட்டாட்ட மாடுகிறான். (உ. வ.).

முட்டாள்[1] (முட்டு + ஆள்) = மூடன். "முட்டாளரக்கர்" (திருப்பு. 141). ம. முட்டாள்.

முட்டாள்[2] = முட்டும் (முட்டித் தாங்கும்) ஆள், தாங்கும் உருவம், அணிகத்தின் (வாகனத்தின்) கீழ் அதைத் தாங்குவது போல் வைக்கும் படிமை. க. முட்டாள்.

முட்டரிசி = நன்றாய் வேகாத (வேக்காடு குன்றிய) அரிசி (உ. வ.).

முட்டம் = 1. பொருந்திய பக்கம், பக்கச்சரிவு. "நளிமலை முட்டமும்" (பெருங். வத்தவ. 2 : 43). 2. பலர் கூடி வாழும் ஊர். (சூடா.). 'குரங்கணின் முட்டம்'. (சிவன் கோயில்)

ஒ. நோ: முட்டா=1. ஊர்க்கிழமை, குறுநில ஆட்சி. 2. சொத்து. (W.).

முட்டா—மிட்டா=1. நாட்டுப் பகுதி, வட்டம். 2. ஊர்க் கிழமை, குறுநில ஆட்சி. 3. சொத்து. 4. உரிமை.

மிட்டா—இந். மிட்டா (mittha).

முட்டுதல்=கூடுதல், பொருந்துதல். ஒ. நோ: *OE. mitan, OS. motian. ON. moeta, Goth.* (ga) motjan, *E. meet.*

*OE. motian, E. moot*, assembly.

*E.* wikenagemot=Anglo-Saxon national council or parliament. *OE witena*, wise mens. (*ge*) *mot*, meeting.

முட்டாட்டம்=முட்டுகை.

முட்டு—ஒ. நோ: *E. butt*, meet end to end.

முட்டு=தாங்கல் ஒ. நோ: *ME. buttress, OF. boutere z mod. F. bouteret*, f. *bouter, E. buttress* f. *butt.*

*OF. abutex* (*but*, end), end on, *E. abut*, border upon, *abulment*, a lateral enpport.

முட்டுக் கட்டுதல்=1. கட்டை முதலியவற்றைத் தாங்கலாகக் கொடுத்தல். 2. முழங்காலைக் கைகளாற் கட்டுதல். முட்டுக் கட்டி உட்காராதே. (உ. வ.). 3. எல்லை கட்டுதல். (யாழ்ப்.) 4. வழியடைத்தல் (W.).

முட்டுக் கட்டியாடுதல்=பொய்க்காற் கட்டையில் நின்று நடத்தல்.

முட்டுக்கால், முட்டுக் கொடுத்தல், முட்டுச் சட்டம், முட்டுச் சுவர் முதலிய தொடர்ச்சொற்கள் தாங்கல் கொடுத்தலையும்;

முட்டுக் கட்டை, முட்டுத் தொய்வு (மூச்சுவிட முடியாமை), முட்டுப்பாடு முதலிய தொடர்ச்சொற்கள் தடை பண்ணுதலையும்;

முட்டு முடுகு, முட்டிடை முதலிய தொடர்ச்சொற்கள் வழி யிடுக்கத்தையும்;

முட்டுச்சீலை, முட்டுப் பட்டினி, முட்டுப் பாந்தை முதலிய தொடர்ச்சொற்கள் தீட்டுப் பாட்டையும்;

முட்டுக்கால் தட்டுதல், முட்டுக்குட்டு, முட்டுக் குத்துதல், (முழங்கால்மேல் நிற்றல்), முட்டுப்பிடிப்பு, முட்டுவலி, முட்டு வீக்கம் முதலிய தொடர்ச்சொற்கள் முழங்கால் வினையையும்; உணர்த்தும்.

முட்டுதல்=நெருங்குதல், இடுகுதல்.

முட்டு—முட்டி=1. விரற் பொருத்துத் தெரியும்படி முடக்கிய கை. 2. முட்டிக்கையாற் குத்துங் குத்து. "முட்டிகள் படப்பட" (பாரத. வேத்திர. 56). 3. நால் விரல்களை யிறுக முடக்கி அவற்றின்மீது கட்டை விரலை முறுகப் பிடிக்கும் இணையா வினைக்கை. (சிலப். 3 : 18, உரை). 4. கைப்பிடி யளவு. "முட்டி மாத்திரமேனும்" (சேதுபு. இராமதீ. 3). 5. பிடி யளவாக இடும் ஐயம் (பிச்சை). "முட்டிபுகும் பார்ப்பார்" (தனிப்பா). 6. படைக்கலம் பிடிக்கும் வகை. "துய்ய பாசுபதத் தொடையு முட்டியும்" (பாரத. அருச்சுனன்றவ. 129). 7. ஒருவர் தம் கையுள் மறைத்ததை இன்னொருவர் தாமாக அறிந்து கூறுங் கலை: 8. திருவிழாவில் ஊரெல்லைத் தெய்வத் திற்கும் படைக்குஞ் சோறு. 9. முழங்காற் சிப்பி அல்லது பொருத்து.

முட்டுதல் என்பது ஒரு பொருளின் தலை அல்லது கடை இன்னொரு பொருள்மேற் படுதலாதலால், முட்டும் பகுதியி னின்று முடிவு அல்லது எல்லைப் பொருள் தோன்றிறறு.

எல்லைக்கறுப்பன் (கருப்பன்), எல்லைப்பிடாரி, எல்லை யம்மன் என்னும் பெயர்கள், சிற்றூர்வாணரின் எல்லைத்தெய்வ வணக்கத்தைக் குறிக்கும். முட்டி—வ. முஷ்டி.

முட்டிக்கால்=1. முழங்காற் சிப்பி அல்லது பொருத்து, 2. முட்டிக்காற் பின்னல். (W.)

முட்டிக்கால் தட்டுதல்=முழங்காற் சிப்பிகள் ஒன்றோ டொன்று உரசுதல். முட்டிக்காலன்=முட்டிகள் தட்டும்படி நடப்பவன். (W.) முட்டிக்காற் கழுதை=பின்னங்கால் முட்டிகள் தட்டும்படி நடக்குங் கழுதை.

முட்டிச்சண்டை=முட்டிக்கைப்போர் (W.) முட்டிப்பிச்சை =பிடியரிசியையம்.

முட்டியடித்தல்=1. முட்டிச் சண்டையிடுதல். 2. முட்டிப் போர் செய்தல்போல் வருந்தித் திண்டாடுதல். வேலைக்கு முட்டியடிக்கிறான். (உ. வ.)

முட்டிக்கால் என்பது போன்றே முட்டிக்கை என்பதும் பொருத்தையே சிறப்பாகக் குறிக்கும். முன்னது காற் பொருத்தும் பின்னது விரற்பொருத்தும் ஆகும்.

முள்—மூள். மூளுதல்=1. பொருந்துதல், 2. தீப்பற்றுதல், 3. சினங்கிளம்புதல். 4. மிகுதல். 5. முனைதல். "முதலற முடிக்க மூண்டான்" (கம்பரா. மாயாசீ. 96.)

மூள் - மூட்டு (பி. வி.). மூட்டுதல்=1. பொருத்துதல் 2. இணைத்தல், இசைத்தல். "கால்கொடுத் தெலும்பு மூட்டி" (தேவா. 631 : 3). 3. தைத்தல். இந்தக் கோணியை மூட்டு. (உ. வ.) 4. தீப்பற்ற வைத்தல். "மூட்டிய தீ" (நாலடி. 224) 5. தீ மூட்டுவதுபோற் சின மூட்டுதல். 6. பகை மூட்டிச் சண்டைக்குத் தூண்டுதல். இருவருக்கும் நன்ருய் மூட்டிவிட்டு விட்டான். (உ. வ.) 7. ஒன்றைச் செலுத்துதல். "கடுகுபு கதிர்மூட்டி" (கலித். 8).

ம. மூட்டுக, தெ. மூட்டிஞ்சு (Mullintsu)

மூட்டு=1. உடல், அணி முதலியவற்றின் பொருத்து. "கவசத்தையு மூட்டறுத்தான்" (கம்பரா. சடாயுவ. 113) 2. சந்திப்பு. (யாழ். அக.) 3. தையல். 4. கட்டு. "வன்ருண் மிசைப்பிணித்த வல்லிகளின் மூட்டறுத்து" (கந்தபு. மீட்சிப். 8) 5. கட்டப்பட்டது (W.) 6. குதிரைக் கடிவாளம். (பிங்.) 7. மன வெழுச்சி. 8. மூட்டு மூட்டாய்ப் பிரிந்துபோய் விட்டது. (உ. வ.) வாழையிலைக் கற்றை. 9. பொத்தகக் கட்டடப் பகுதி. ம. தெ. மூட்டு, க. முட்டை.

மூட்டு—மூட்டை=1. பொட்டணம். இந்தத் துணிகளையும் மூட்டையில் வைத்துக் கட்டு, (உ. வ.) 2. பொதி. அரிசி மூட்டைகளையெல்லாம் வண்டியிலேற்றிக் கொண்டுபோய்விட் டார்கள். 3. அறுபது பட்டணம்படி கொண்ட ஒரு கோணி யளவு. 4. பெரும்பொய். அவன் மூட்டையளக்கிருன்.

ம. மூட்ட, தெ. மூட்ட, து. மூட்டே.

மூட்டை—மூடை=1. பொதி. "பொதி மூடைப்போரேறி" (பட்டினப். 137.) 2. மிகச் செறிந்த கூலக்கோட்டை. "கடுந் தெற்று மூடை" (புறநா. 285). 3. கூலக்குதிர். "கழுந்தெற்று மூடையின்" (பொருந. 245 ). மூட்டு—மாட்டு. மாட்டுதல்= 1. இணைத்தல். "சிறுபொறி மாட்டிய பெருங்கல் லடா அர்" (நற். 19.) 2. தொகுத்தல். "அம்பினை மாட்டி யென்னே", (கம்பரா. நிகும்பலை. 96.) 3. செருகுதல். "அடுப்பினின் மாட்டு மிலங்ககில்" (காஞ்சிப்பு. நகர. 73). 4. மனத்திற் கொள்ளுதல். "சொன்மாலை யீரைந்து மாட்டிய சிந்தை" (திருவிசை. கருவூ. 8 : 10.) 5. தீப்பற்றவைத்தல். "விறகிற்... செந்தீ மாட்டி" (சிறுபாண். 156.) 6. விளக்குக் கொளுத்துதல் "நெய் பெய்து மாட்டிய சுடர்" (குறுந். 398.) 7. அடித்தல். "வின் முறிய மாட்டானே" (தனிப்பா.) நன்ருய் மாட்டு மாட் டென்று மாட்டிவிட்டான். (உ. வ) 8. பயன்படுத்துதல். "வள்ளருன் வல்ல வெல்லா மாட்டினன்" (சீவக. 1274.)

தெ. மாட்டு.

மாட்டு=தொடர்புள்ள சொற்கள் ஒரு பாட்டில் அடுத்திருப்பினும் நெட்டிடையிட்டுக் கிடப்பினும், பொருந்தும் வகையிற் கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளுமுறை.

> ''அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
> இயன்றுபொருள் முடியத் தந்தன ருணர்த்தல்
> மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்''
>
> (தொல், செய். 208)

மூட்டு-மூட்டம்=1. உலைமுகம். (யாழ், அக.) 2. சொக்கப் பனை. (W.) 3. விறகு. (யாழ். அக.) 4. கம்மக் கருவி வகை. (யாழ். அக.)

மூட்டு—மூட்டான் — முட்டான்=அணையாது வைக்கும் நெருப்பு மூட்டம்.

முள்—முய்—முய — முயகு — முயங்கு. முயங்குதல்=1. பொருந்துதல். ''முலையு மார்பு முயங்கணி மயங்க'' (பரிபா. 6 : 20.) 2. தழுவுதல். ''முயங்கிய கைகளை யூக்க'' (குறள். 1238.) 3. புணர்தல். ''அறனில்லான் பைய முயங்கியுழி'' (கலித். 144.) 4. செய்தல். ''மணவினை முயங்க லில்லென்று'' (சூளா. தூது. 100 ).

முயங்கிக் கொள்ளுதல்=கணவனும் மனைவியுமாக வாழ்தல். (W.)

முயங்கு — முயக்கு=தழுவுகை. ''வளியிடை போழப் படாஅ முயக்கு'' (குறள். 1108). ''முன்பு மாதவப் பயத்தி னுலவண் முயக்கமர் வார்'' (தணிகைப்பு. நாட்டுப். 48 )

முயக்கு—முயக்கம்=1. தழுவுகை. ''பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம்'' (குறள். 913). 2. புணர்ச்சி. முயக்கம் பெற்றவழி (ஐங்குறு. 93, உரை). 3. தொடர்பு. ''ஆணவத்தின் முயக்கமற்று'' (தணிகைப்பு. நந்தி. 110).

முயங்கு—மயங்கு. மயங்குதல்=1. நெருங்குதல். 2. கலத்தல். 3. ஒத்தல். ''காரிருள் மயங்குமணி மேனியன்'' (பரிபா. 15 : 50). 4. கைகலத்தல். ''தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து'' (புறநா. 19). 5. கலக்க முறுதல். 'மயங்கின வாய்ப்புளும்'' (பு. வெ. 10, சிறப். 11). 6. அறிவு கெடுதல். ''புலான் மயங்கான்'' (ஏலா. 2 . 7. மருளுதல். 8. வேற்றுவய மாதல். 9. வெறிகொள்ளுதல். ''தாமயங்கி யாக் கத்துட் டுங்கி......வாழ்நாளைப் போக்குவார்'' (நாலடி. 327), 10. மாறுபடுதல்.) ''மேனியுமுள்ளமு மயங்காத் தேவர்''

(கல்லா. 82 : 30). 11. நிலையழிதல். ''ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டு'' (மணி. 23 : 104). 12. வருந்துதல். ''முயங்கல் விடாஅ லிவையென மயங்கி'' (அகநா. 26). 13. தாக்குண்ணுதல். ''காலொடு மயங்கிய கலிழ்கடலென'' (பரிபா. 8 : 31). 14. ஐயுறுதல், 15. தயங்குதல். அவரைப் போய்ப் பார்க்கத் தயங்குகிறான். (உ. வ). 16. உணர்ச்சி யிழத்தல். மயங்கிசைச் கொச்சகம் = உறுப்புக்கள் மயங்கியும் மிக்கும் குறைந்தும்வரும் கொச்சகக் கலி.

முயக்கு—மயக்கு = 1. போர்செய்கை. ''இரும்புலி மயக்குற்ற'' (கலித். 48) 2. கலக்கம். ''கனமயக்குற்றேன்'' (மணி. 11 : 104). 3. மருளச்செய்யுஞ் செய்கை. ''மாய மயக்கு மயக்கே'' (திவ். திருவாய். 8 : 7 : 3).

மயக்குதல் = 1. கலத்தல். ''பாற்பெய் புன்கந்தேனொடு மயக்கி'' (புறநா. 34). 2. சேர்த்தல். ''உயிரெனுந் திரிமயக்கி'' (தேவா. 1189 : 4). 3. மனங் குழம்பச் செய்தல். ''குறளை பேசி மயக்கி விடினும்'' (நாலடி. 189). 4. மருளச் செய்தல். ''மாய மயக்கு மயக்கானென்னை வஞ்சித்து'' (திவ் திருவாய். 8 : 7 : 4). 5. வேற்றுவயப் படுத்துதல். (கம்பரா. இராவணன்கோ. 51). 6. நிலை கெடுத்தல். ''வள்ளையாய் கொடி மயக்கி'' (அகநா. 6). 7. சிதைத்தல். ''எருமை கதிரொடு மயக்கும்'' (ஐங்குறு. 99). 8. உணர்ச்சி யிழக்கச் செய்தல். ''மதகரியை யுற்றரி நெரித்தென மயக்கி......துகைத்தான்'' (கம்பரா. மகுட. 5).

முயக்கம்—மயக்கம் = 1. கலப்பு. வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி (கல்லா. 62 : 18). 2. ஒரு வேற்றுமை யுருபு மற்றொரு வேற்றுமைப் பொருளிற் கலத்தல். வேற்றுமை மயக்கம். (நன். 317, உரை). 3. எழுத்துப் புணர்ச்சி. உடனிலை மெய்ம் மயக்கம், வேற்றுநிலை மெய்ம் மயக்கம்.

> ''மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் திரெட்
> டாகுமிவ் விருபால் மயக்கும்'' (நன். 110)

4. இருபாற் கலப்பாகிய அலித்தன்மை. (W.). 5. அறிவின் திரிபு. 6. அறியாமை. ''காம வெகுளி மயக்க மிவை மூன்றனுமங்கெட'' (குறள். 360). 7. காமநோய். (அரு. நி.). 8. உணர்விழப்பு.

மயங்கு—மசங்கு. மசங்குதல் = மயங்குதல் (தேவா. 567 : 10). 2. ஒளி குறைதல். ''மேனியில் வன்னமு மசங்காதோ'' (இராமநா. அயோத். 11).

முயகு—மயகு—மசகு. மசகுதல்=1. சுணங்கி நிற்றல். 2. மனந் தடுமாறுதல்.

மசகு=நடுக்கடலில் திசை தெரியாது ஆழ்ந்தகன்ற இடம். (யாழ்ப்.).

மசங்கு—மசங்கல்=1. பகலும் இரவும் கலக்கும் அந்திப் பொழுது. 2. மயக்கம். மசங்கற்சமண் மண்டைக்கையர். (தேவா. 567 : 10).

மசங்கு—மசக்கு. மசக்குதல்=1. குழப்புதல். 2. மயங்கச் செய்தல். "லீலையிலேயுற முறை மசக்கவும்" (திருப்பு. 838).

மசக்கு—மசக்கம்=1. மயக்கம். 2. மந்தம். 3. மசக்கை.

மசக்கல்=மசங்கல்.

மயக்கி—மசக்கி=அழகாலும் தளுக்காலும் மயக்குபவள்.

மசக்கை=சூலிக்கு உண்டாகும் மயக்கம்.

முய—மய. மயத்தல்=மயங்குதல். "மயந்துளே னுலக வாழ்க்கையை" (அருட்பா. vi, அபயத்திறன். 14).

மய—மயல்=1. ஐயுறவு. "மயலறு சீர்த்தி" (பு. வெ. 9 : 7). 2. மயக்கம். "மயலிலங்குந் துயர்" (தேவா. 121 : 2). 3. மந்தம். (யாழ். அக). 4. ஆசை. "தண்டாமயல் கொடு வண்டு பரந்தரற்ற" (கல்லா. 20 : 6). 5. காம விழைவு. "மாதர் மயலுறுவார்கண் மருள்கொண்ட சிந்தை" (திருமந். 203). 6. கோட்டி (பைத்தியம்). "மயற் பெருங்காதலென் பேதைக்கு" (திவ். திருவாய். 4 : 4 : 10). 7. மாயை. "மய லாரும் யானுமறியேம்" (கம்பரா. நாகபா. 258). 8. அச்சம். (யாழ். அக.). 9. பேய். (பிங்.). 10. செத்தை "வம்புண் கோதையர் மாற்றும் மயலரோ" (சீவக. 128).

ம. மய்யல், தெ. மயல, க. மயமு.

மயல்—மயற்கை=1. மயக்கம். "மயற்கை யில்லவர்" (சீவக. 1346.). 2. செத்தை. (சீவக. 1393, உரை).

மயல்—மயர். மயர்தல்=1. மயங்குதல். 2. திகைத்தல். "வைது கொன்றன னேவென வானவர் மயர்ந்தார்" (கம்பரா. கும்பக. 244). 3. சோர்தல். "மயரு மன்னவன்" (கம்பரா. இரணியன்வதை. 13). 4. உணர் வழிதல். "விடந்தனை யயின்றன ரெனும்படி மயர்ந்து" (கந்தபு. திருவி. 80).

மயர்=மயக்கம். "மயரறுக்குங் காமக் கடவுள்" (பரிபா. 15 : 37).

மயர்—மயர்வு=1. சேர்வு. 2. அறிவு மயக்கம். (பிங்.). 3. அறியாமை (அஞ்ஞானம்) ''மயர்வற மதிநல மருளினன்'' (திவ். திருவாய். 1 : 1 : 1).

மயர்—மயரி=1. அறிவிலி. ''மயரிக ளல்லாதார்'' (இனி. நாற் 13). 2. காமுகன். ''மயரிகள் சொற்பொருள் கொண்டு'' (திரு நூற். 53) 3. பித்தன். ''நின்பால் வாங்கா நெஞ்சின் மயரியை'' (மணி. 22 : 75).

மயல்—மையல்=1. செல்வம் முதலியவற்ருல் வருஞ் செருக்கு. ''மையல்.......மன்னன்'' (சீவக. 589). 2. காம மயக்கம். ''மையல் செய்தென்னை மனங்கவர்ந்தானே யென் னும்'' (திவ். திருவாய். 7 : 2 : 6) 3. கோட்டி (பைத்தியம்). ''மைய லொருவன் களித்தற்ருல்'' (குறள். 838). 4. யானை மதம். ''வேழ மையலுறுத்த ' (பெருங். உஞ்சைக். 37 : 232). 5. கருவூமத்தை. (மலை.)

மையலவர்=பித்தர். ''மையலவர் போல மனம் பிறந்த வகை சொன்ஞர்'' (சீவக. 2013).

மையலார்=1. பித்தர். 2. மாய வினைஞர். ''மண்மயக்கு மயக்குடை மையலார்'' (இரகு. யாகப். 35).

மையலி=மாய வினையாட்டி. (யாழ். அக).

மையனேக்கம்=துயரப் பார்வை. ''மையனேக்கம் படவரு மிரக்கம்'' (தொல். மெய்ப். 13, உரை).

மய—மையா. மையாத்தல்=1. மயங்குதல். ''மலர்காணின் மையாத்தி நெஞ்சே'' (குறள். 1112). 2. ஒளி மழுங்குதல். ''விண்மே லொளியெல்லா மையாந் தொடுங்கி'' (பு.வெ. 9:13). 3. பொலிவு அழிதல். ''மாந்த ரென்பவ ரொருவரு மின்றி மையாந்த வந்நகர்'' (காஞ்சிப்பு. நகரேற். 101).

முள்—மள்—மள்கு. மள்குதல்=1. ஒளி குறைதல். 2. குறைதல். ''மள்கலில் பெருங்கொடை'' (கம்பரா. கார்கால. 104).

மள்கு—மழுகு. மழுகுதல்=ஒளி குறைதல். ''முத்துத் தொடை கலிழ்பு மழுக'' (பரிபா. 6 : 16).

மழுகு—மழுங்கு. மழுங்குதல்=1. ஒளி குறைதல். ''கதிர் கண் மழுங்கி மதியு மதிர்வதுபோல்'' (கலித். 146). 2 பொலிவு அழிதல். (திவா.). 3. கவனிப்பின்றி மறைந்துபோதல். (W.). 4. கெடுதல்.

மழுங்கு—மழுக்கு. மழுக்குதல்=ஒளி குறையச்செய்தல்.

மழுக்கு—மழுக்கம் = ஒளி குறைகை.

மழுங்கு—மங்கு. மங்குதல் = 1. ஒளி குறைதல். 2. நிறங் குன்றுதல். 3. பெருமை குறைதல். 4. குறைதல். "தாக மங்குதலின்மையால்" (விநாயகபு. 80 : 94). 5 வாட்டமுறுதல். (W.) 6. கெடுதல். "தீவினைத் தெவ்வென்னும் பேர்மங்க" (திருநூற். 19.). 7. சாதல். "மங்கியு முற்பவித்து முழல்வல் லிடரில்" (திருப்போ. சந். மட்டுவிருத். 7).

க. மக்கு (maggu).

மங்கு—மங்கல் = 1. ஒளி மழுக்கம். (சங். அக.). 2. இருள் கலந்த நேரம். 3. கெடுகை.

மங்குங் காலம் = வளங் குன்றுங்காலம். "மங்குங் காலம் மா; பொங்குங் காலம் புளி." (பழ.).

மங்கு நோய்முகன் (சனி) = வாழ்நாளில் முதலில் வந்து ஏழரையாண்டு தீங்கு செய்யும் நோய்முகன் (சனி).

மங்கு = 1. கேடு. தெ. மங்கு, க. பங்கு (banku). 2. வங்கு. (W.).

மங்கு—வங்கு = 1. மேனியில் மங்கல் நிறமாகப் படரும் ஒருவகைப் படைநோய். 2. குளித்தபின் துவர்த்தாத மேனியிற் காணும் படைபோன்ற தோற்றம். 3. நாய்ச் சொறி.

மங்கு—மங்குல் = 1. ஒளிக் குறைவு. 2. கண்தெரியாவாறு ஒளி குறைந்த மூடுபனி. "மங்குல் மனங்கவர" (பு. வெ. 9:45). 3. இருட்சி. "மங்குல் மாப்புகை" (புறநா. 103). 4. இரவு. (திவா.). 5. இருண்ட முகில். "மங்குரேய் மணிமாட.......நெடு வீதி" (தேவா. 41 : 7). 6. கரியவானம். "மங்குல்வாய் விளக்கு மண்டலமே" (திருக்கோ. 177). 7. வானவெளிப் பக்கமாகிய திசை. "புயன் மங்குலினறை பொங்க" (கலித். 105 : 25).

முள்—முய்—மய், மை = கருப்பு, இருள். மைம்மை = கருமை, இருண்மை.

மைம்மை—மைம்மைப்பு = கண்ணிருளல், கண் மங்கல், பார்வைக்குறை. "மைம்மைப்பி னன்று குருடு" (பழ. 298).

மைம்மை—மைமை—மைமல் = மாலைநேரம். (யாழ். அக.).

மைம்மை—மம்மல் = அந்தி நேரம்.

மம்மல்—மம்மர் = 1. மயக்கம். "மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகும்" (நாலடி. 14). 2. காமம். (W). 3. கல்லாமை. "காணக் குருடராச் செய்வது மம்மர்" (நான்மணி. 24).

4. துயரம். (பிங்). "மம்மராறுக்கு மருந்து கண்டாய்" (தேவா. 845 : 8).

மய—மயப்பு—மப்பு=1. மயக்கம். 2. மட்டித்தனம். 3. செருக்கு. அவனுடைய மப்பை அடக்க வேண்டும். (உ. வ.). 4. முகில் மூட்டம். 5. செரியாமை.

தெ. க. மப்பு (mabbu).

மள்கு—மட்கு. மட்குதல்=1. மயங்குதல். "மட்கிய சிந்தை" (கம்பரா. தைல 5). 2. ஒளி மங்குதல். "நாகத்தின் வஞ்ச வாயின் மதியென மட்குவான்" (கம்பரா. அயோமு. 12). 3. அழுக்கடைதல். 4. வலி குன்றுதல். "தரியலர் முனைமட்க" (பாரத. மீட்சி. 176). ஒ. நோ: வெள்—வெள்கு—வெட்கு.

மட்கு—மக்கு. மக்குதல்=1. ஒளி மழுங்குதல். 2. அழுக்கேறுதல். (W.). தெ, க. மக்கு (maggu). 3. கருத்துப் போதல். வெள்ளி மக்கி விட்டது. 4. மந்தமாதல். "மக்கிய ஞானத் தீயால்" (கைவல். தத். 90). 4. கெட்டுப் போதல். (W.). 5. அழிதல். (W.).

மக்கு=1. மந்தன். அவன் கணக்கில் மக்கு (உ. வ.). 2. அறிவிலி. 3. சுவர் வெடிப்பில் அடைக்கும் அடைமண். 4. மரவேலையிற் சந்து தெரியாமல் அடைக்கும் தூள்.

மக்கு—மக்கன்=மந்தன்.

மக்கு—மக்கல்=1. கருத்துப்போன வெள்ளி. 2. கெட்டுப் போன அரிசி.

குறிப்பு:—ஒரு கருத்து ஒரு அல்லது பல வழிகளில் தோன்றலாம்.

(தொடரும்)

———

## அகரவொலியும் ஆகாரவொலியும்

சிறிது தோன்றியும் தோன்றாமலும் உள்ள இறைவனியல்பை அகரவொலி காட்டா நிற்ப, உலகுயிர்களை இயக்கி அவ் வியக்கத்தால் தன்னிலையைப் புலப்படுத்தி ஐந்தொழிலியற்றும் முதல்வனியல்பை ஆகாரவொலி குறிப்பிடா நிற்கு மென்க.

—மறைமலையடிகளார்

(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை, பக். 52)

# சங்க நூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(முன் இதழ் ௫௪௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

17. சிறுமீன்

சங்க நூல்களில் சிறுமீன் என்றும் பெருமீன் என்றும் சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. பெருமீன் என்ற பெயர் சில இடங்களில் பொதுப்பெயராகவும் சில இடங்களில் சிறப்புப் பெயராகவும் வழங்கியுள்ளது. பெருமரம் என்ற பெயர் பொதுவாகப் பெரியதான மரத்தைக் குறித்தாலும் சிறப்பாகத் தனிப்பட்ட ஒரு மரத்தைக் குறிப்பதைக் காணலாம். அதுபோன்றே சங்கநூல்களில் பெருமீன் வழக்கும் பயின்று உள்ளது. ஆனல், சிறுமீன் என்ற சொல் பொதுவாகச் சிறிய மீன்களைக் குறித்தே வழங்கியுள்ளது. ஆயினும் ஒரு பாட்டில் சிறுமீன் என்ற பெயர் ஒரு குறிப்பிட்ட மீனைக் குறித்து வந்திருப்பதைக் காணலாம்.

> "பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையொடு
> ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
> மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
> தாய்ப்பயிர் பிள்ளை வாய்படச் சொரியும்
> கானலம் படப்பை ஆனு வண்மகிழ்ப்" —நற்றிணை, 91

நற்றிணை 91ஆம் பாட்டில் ஒருவகைச் சிறுமீனை "ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்" என்று வர்ணித்துள்ளதைப் பார்க்கலாம். நான்கு அடைமொழிகளால் விளக்கியுள்ள இந்த மீன் இயற்கையில் தமிழ்நாட்டுக் கடற்கரையிலும் ஆற்றுக் கழிமுகத்திலும் அகப்படுகின்றது. இந்த மீன் மிகவும் சிறியது. ஒன்றரை அங்குலத்திலிருந்து மூன்று அங்குலம் வரையே வளரக்கூடியது. ஐய என்பதற்கு மெல்லிது என்று உரையாசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி அவர்கள் பொருள் கூறியுள்ளார். இயற்கையில் மிகச்சிறிய மீனுகையால் ஐய என்பது இதன் குறுமையையும் மெல்லிதான தன்மையையும் குறித்து வந்ததாகலாம். இந்த மீனிற்கு உடலின் அடிப்பகுதியில் ஒவ்வொரு செதிளிலும் நடுவில் ஒரு சிவப்புப்புள்ளி உள்ளது. (Each scale along the side with a central red spot.) இதையே 'சிறுகண் செங்கடை' என்று கூறியதாகத் தெரிகின்றது. சிவந்த கட்கடையையுடைய சிறிய மீன் என்று பின்னத்தூரார் பொருள் கூறினர். மீனின் பக்கங்களில் ஒவ்வொரு செதிளிலும் ஒரு செம்புள்ளி இருப்பதால் இதையே சிறுகண் செங்கடை என்று கூறியிருக்கலாம். இந்த மீனைத் தற்காலத்தில் 'கண்ணிக் குறியன்' என்று மலை

யாளத்தில் அழைக்கின்றனர். இந்தப் பெயர் குறிய கண்ணை யுடைய மீன் என்று பொருள் தரலாம். நற்றிணையில் சிறுகண் என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம். ஒரியா மொழியிலும் 'கணக்குரி' என்று சொல்கின்றனர். இது கண்ணிக்குறியன் என்ற மலையாளப் பெயரோடு ஒத்துள்ளது. கன்னடமொழியில் 'குட்டியன்' என்று அழைப்பர். குற்றியன் என்ற பெயர் இவ்வாறு மாறியிருக்கலாம். குறியது என்பதே இப்பெயர்களின் அடிப்படைக் கருத்தாகும். சிறுமீன் என்று நற்றிணை கூறுவதோடு இப்பெயர்கள் கருத்தில் ஒத்துவருகின்றன. நற்றிணையில் கூறப்பட்ட மீனின் விளக்கத்திலிருந்து இந்த மீன் சிறிய கண்ணையுடைய மெல்லிதான மீன் என்றும், செம்புள்ளிகளை யுடைய மீன் என்றும் தெளிவாகின்றது. இயற்கையில் அவ்வாறு காணப்படும் மீனை Panchax rubrostigma (அல்லது) Haplochilus rubrostigma என்றழைக்கின்றனர். இந்தச் சிறியமீனை ஆண்பெண் நாரைகள் சேர்ந்து பிடித்துக் கூட்டில் இருந்த சிறிய குஞ்சுகளுக்கு ஊட்டின என்று கூறப்பட்டுள்ளது. இத்தகைய சிறிய மீனைக் குஞ்சுகளுக்கு ஊட்டியது இயற்கையான செய்தியாகும். இந்த மீனை நீரில் வளர்த்தால் கொசுவின் புழுக்களைத் தின்று கொசுத் தொல்லையை நீக்கும் என்று கண்டுபிடித்துள்ளனர். இதை ஒரு கொசுக்கொல்லியாகப் (larvicidal) பயன்படுத்தலாம் என்று கூறுவர். இந்த மீனை ஆங்கிலத்தில் Minnow என்றழைப்பர்.

## 18. பெருமீன்

சங்கநூல்களில் பெருமீனைப்பற்றிச் சில பாடல்களில் கூறப் பட்டுள்ளது. பெருமீன் என்பது திமிங்கிலமேயாகும் என்பதைச் 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் தெளி வாக்கியுள்ளேன். திமிங்கிலம் உருவத்தில் பெரிய மீனைப் போலத் தோன்றினும் குட்டிபோட்டுப் பால்கொடுக்கும் விலங் காகும். இதை யானைமீன், பனைமீன், திமிலம் என்றெல்லாம் அழைத்தனர். திமிங்கிலம் என்ற பெயர்கூடத் திமிலம் என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து தோன்றியதாகத் தெரிகின்றது. இப் பெயர்க்கு வடசொல் வேர் இருப்பதாகத் தெரியவில்லை. திமிங் கிலத்தை வேட்டையாடியதையும் சங்கநூல்கள் கூறியுள்ளன. தற்காலத்தில் தமிழ்நாட்டுக் கரையில் சிறிய திமிங்கிலங்கள் தானாக ஒதுங்குவதைக் காணலாம். இவ்வாறு திமிங்கிலங்கள் கரையில் ஒதுங்குவது பல நாடுகளில் நிகழ்ந்துள்ளது. இவ் வாறு ஒதுங்கும் திமிங்கிலத்தை 'Beached Whale' என்றழைப்பர். சங்கநூலிலும் இவ்வாறு கரையில் ஒதுங்கிய திமிங்கிலத்தைப் பற்றிய செய்தி வருகின்றது.

*"மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்*
*இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி*
*அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்"* —நற்றிணை, 239

பரதவர்கள் வருந்தாது பெற்ற பெரிய மீன் என்று உரைகூறப் பட்டுள்ளது. இவ்வாறு பரதவர்க்கு வருந்தாது கிடைத்த பெருமீன் கடற்கரையில் ஒதுங்கும் சிறு திமிங்கிலமே என்பதில் ஐயமில்லை. அண்மையில் (ஜூலை 23, 1975) பாண்டிச்சேரிக் கடற்கரையில் 20 டன் எடையுள்ள 45 அடி நீளமுள்ள சிறிய திமிங்கிலம் ஒதுங்கிற்று. இந்த மீனைப் பனைவாளை என்றும் உறவி என்றும் புதுவைமீனவர் அழைத்தனர்.

*"பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்*
*வீங்குபிணி நோன்கயி றரீஇ யிதைபுடையூக்*
*கூம்புமுதன் முருங்க வெற்றிக் காய்ந்துடன்*
*கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ*
*நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல".*
—மதுரைக்காஞ்சி 375–379

*"ஒள்ளிய பனைமீன் றுஞ்சுந் திவலைய"*
—கம்ப. கடலுருவுபடலம், 23

*"பனைமீன் றிமிலொடு தொடர்ந்து துள்ள"*
—கம்ப. கடலுருவுபடலம், 50

மதுரைக்காஞ்சியிலும் கம்பராமாயணத்திலும் பனைமீன் என்று கூறப்பட்டிருப்பது திமிங்கிலமேயாகும். கடலில் கடுங்காற்றிலும் நெடுஞ்சுழியிலும் அகப்பட்ட கப்பல் கூம்பு (Mast) உடைந்து பாய்மரங்களைக் (Sails) கட்டிய கயிறுகள் அறுந்து சாய்ந்து கிடப்பதுபோல் என்று மதுரைக்காஞ்சி கூறியுள்ளது. கடலில் இத்தகைய சூழ்நிலையில் அகப்பட்ட கப்பல் பனைமீன் வழங்கும் பரப்பில் அகப்பட்டால் அதன் நிலை என்னவாகும் என்பதே மதுரைக் காஞ்சியில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. பெரிய திமிங் கிலங்கள் பாய்மரக் கப்பலை வாலால் அடித்துக் கவிழ்த்துவிடு மென்பது உண்மையே. இத்தகைய ஊறு வருமென்பதைச் சுட்டிக்காட்டியே பனைமீன் வழங்கும் பரப்பு என்று மதுரைக் காஞ்சி கூறியுள்ளது.

சங்ககாலத்தில் வழங்கிய பனைமீன் என்ற பெயர் இன்றும் புதுவை மீனவர்களிடம் வழங்குவது கவனிக்கத்தக்கது. உ.வே. சாமிநாதய்யர் பனைமீனைத் திமிங்கிலம் என்று புரிந்துகொள்ளாது வெறும்பெயரொப்புமையே கருதி அதைப் பனையேறிக்கெண்டை என்று கூறினர். பனையேறிக்கெண்டை கடலில் வாழும் மீன் அன்று. நன்னீரில் வாழும் மீனாகும். பனையேறிக்கெண்டை பக்கத்தில் உள்ள செதிள்களால் நடந்து தரையில் சிறிது தொலைவு செல்லக்கூடியது. தண்ணீரை விட்டு வெளியே போட்டாலும் வாழக்கூடியது. இதன் நீளம் அரைஅடியே

யாகும். இவ்வளவு சிறிய மீனைக் கடலில் வாழும் பெரிய பனை மீன் என்று கூறியது தவறாகும். பனையேறிக்கெண்டையை இக்காலத்தில் பனையன்தேளி என்றழைப்பர். சங்கநூலில் கூறப்பட்ட பனைமீன் இதுவன்று. அது திமிங்கிலமாகும். இக்கால வழக்கை வைத்துச் சங்ககாலப் பெயரைப் புரிந்துகொள்ள முடியாது. இக்காலப் பெயர் பனைமரத்தில் இந்தமீன் ஏறுவதாகக் கருதின கற்பனையால் வந்ததாகும். ஆனால், சங்ககாலப் பெயரில் வரும் பனை என்ற சொல் மிகப் பெரியதைக் குறிப்பிடும் கருத்தில் தோன்றியதாகும். தினையை மிகச் சிறியதுக்கு உவமித்தும் பனையை மிகப் பெரியதுக்கு உவமித்தும் கூறும் வழக்கு திருக்குறளிலேயே காணப்படுகின்றது.

சங்க நூல்களுக்குப் பின்வந்த தேவாரத்தில் பெரும்பாலும் சங்க நூல்களில் கூறப்பட்ட நன்னீர் மீன்களே சொல்லப் பட்டுள்ளன. அவை வாளை, செங்கயல், சேல், வரால், கெடிறு, மலங்கு, இருல் ஆகும். இவற்றைத் தவிர தேவாரத்தில் மட்டும் கிளி, குருவி, கொய் என்ற மீன் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இந்த மீன் பெயர்கள் பிற்கால நூல்களில் காணப்படவில்லை.

> "அருவிபாய்தரு கழனி யலர்தரு குவளையங் கண்ணார்
> குருவிபாய்கிளி சேர்ப்பக் குருகினமிரிதரு கிடங்கில்
> பருவரால்குதி கொள்ளும் பைம்பொழில் வாஞ்சியத் துறையும்
> இருவராலறி யொண்ணு விறைவன தறைகழல் சரணே."
>
> —திருவாஞ்சியப் பதிகம், 76-27

குருவி என்ற மீனும் கிளி என்ற மீனும் எவை என்று ஆராய வேண்டும். கிளி என்ற மீன் இன்று கீச்சான் என்று மீனவர்களால் அழைக்கப்படுகின்றது. கீச்சென்று கிளி போலக் கத்துவதால் இந்த மீன் கீச்சான் என்றழைக்கப்பட்டது. இதைச் சில இடங்களில் கிளி என்றே மீனவர் அழைக்கின்றனர். தெலுங்கு மீனவர்கள் 'சமுத்திரக் கிளி' என்று இந்த மீனை அழைக்கின்றனர். மலையாளத்தில் கீரி என்று அழைக்கின்றனர். தமிழ் மீனவர்களும் தெலுங்கு மீனவர்களும் இன்னும் கிளி என்றழைப்பதால் இந்த மீன் எதுவென்று கண்டுகொள்ள முடிகின்றது. இந்த மீனைப் பளிங்கீச்சான், பதன்கிளி, சவந்தின்னிக்கிளி, கோவக் கீச்சான், வாய்க்கிளி, கிளிப்போத்து என்ற பெயர்களாலும் இன்று மீனவர் அழைக்கின்றனர். இந்த மீன் கடல் மீனாக இருந்தாலும் ஆற்றுக் கழிமுகத்தில் கடல் அலைவீசும்போது வரும். இந்த மீன்கள் முட்டையிடும்போது ஆற்று முகத்தில் நுழைந்து முட்டையிட்டுப் பின்னர்க் கடலுக்குத் திரும்பி விடுகின்றன. இந்த மீன் அருவி பாய்தரு கிடங்கில் இருந்ததாக அப்பர் தேவாரம் கூறுகின்றது. சென்னை அரசு தலைமைச் செயலகம் இருக்கும் கோட்டை அகழியில் (கிடங்கில்) இந்த

மீன்கள் வாழ்வதைக் கண்டுபிடித்துள்ளனர். ஈழநாட்டுத் தமிழில் இதற்குக் கோவக்கீச்சான், பளிங்கீச்சான் என்ற பெயர்கள் வழங்குகின்றன. இப் பெயர்கள் இன்று தமிழ்நாட்டு மீனவர்கள் வழங்கும் பெயர்களாகும். ஆனால், சிங்கள மொழியில் வைரன் கிளி, கிளி என்ற பெயர்கள் வழங்குகின்றன. இந்தப் பெயர்கள் தமிழ்ப் பெயர்கள் என்று தெளிவாகத் தெரிகின்றது. சிங்கள மொழியில் பழைய தூய தமிழ்ப்பெயர்கள் வழங்கியிருக்கவும் ஈழத் தமிழில் இக் காலத்தில் தமிழ்நாட்டில் வழங்கும் பெயர் களே வழங்குவதைக் காணலாம். ஆதலின் சிங்கள மொழியில் வழங்கும் தூய தமிழ்ப் பெயர்களே முற்காலத்தில் ஈழத் தமிழில் வழங்கிப் பின்னர்ச் சிங்கள மொழியில் எடுத்துக்கொள்ளப் பட்டதெனக் கருதவேண்டும். இந்த நல்ல பெயர்களைச் சிங்கள மொழி பாதுகாத்து வைத்திருக்கும்போது ஈழத்தமிழ் இப் பெயர்களைப் பாதுகாக்கவில்லை. இதற்குத் தமிழ்நாட்டு மீனவர் களின் தொடர்பே காரணமாகும். வைரன்கிளி என்ற சிங்களப் பெயர் தெளிவாக வரையன்கிளி என்ற தமிழ்ப் பெயரின் மாற்ற மாகும்.

கிளிமீன் என்ற பெயர் இந்தமீன் வெளியிடும் ஒருவகை ஓசை யின் காரணமாக இடப்பட்ட பெயராகும். கடலில் அசையாது இருக்கும் படகை இந்த மீன்கள் சிறிய கூட்டமாக அணுகும் வழக்கமுண்டு. மீனவர்கள் படகுத் துடுப்பை நீரிலிட்டு அதன் ஒரு மூலையில் காது வைத்துக் கேட்பர். அப்போது இந்த மீன்கள் சிறு கூட்டமாகச் சேர்ந்து வந்து செய்யும் ஒருவகை ஓசை கேட்கும். இந்த ஓசை கிளி செய்யும் ஓசை போலிருப் பதாக மீனவர்கள் கருதிக் கீச்சான் என்றும் கிளி என்றும் பெய ரிட்டனர். இந்த மீனை ஆங்கிலத்தில் The squeaking perches என்றழைப்பர். அறிவியலில் Therapon spp என்றழைப்பர். தேவாரத்தில் குருவிமீன் என்று கூறப்பட்டிருக்கும் மீன் எது என்று தெளிவாக விளங்கவில்லை. குருவிபோல் ஓசையிடும் மீனாக இருக்கலாம். இப்போது இப் பெயர் வழங்கவில்லை யாதலால் கண்டுபிடிப்பது எளிதன்று. தேவாரத்தில் சள்ளை என்ற பெயருடைய மீன் கூறப்பட்டதாகத் தேவார ஒளிநெறி யில் காட்டப்பட்டுள்ளது. ஆனால், சுந்தரர் தேவாரத்தில் சொல்லப்பட்ட சள்ளை என்ற பெயர் தனித்ததொரு மீனைக் குறித்ததாகத் தெரியவில்லை

*"சள்ளை வெள்ளையங் குருகு தானது வாமெனக் கருதி*
*வள்ளை வெண்மலரஞ்சி மறுகியோர் வாளையின் வாயில்"*

—*76-4*

சள்ளை வெள்ளையங்குருகு என்று தேவாரத்தில் சொல்லப்பட்டது சங்க நூல்களில் சொல்லப்பட்ட வெள்ளாங்குருகின் குஞ்சு

என்று தெரிகின்றது. இது வெள்ளாங்குருகின் பிள்ளை என்று சங்கநூல்களில் கூறப்பட்டது. அப்பர் தேவாரத்தில் 'கொய்' என்றொரு மீன் பெயர் வருகின்றது. தேவார ஒளிநெறியில் இந்த மீன் $8\frac{1}{2}$ அங்குல நீளமுடையதென்றும் நன்னீரில் வாழும் பசியமீன் என்றும் கூறப்பட்டுள்ளது.

> *"கைய ளைத்துங் கலந்தெழு காவிரி*
> *செய்ய ளைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்*
> *கொய்ய ளைத்துங் கொணருங் குரக்குக்கா*
> *ஐய ளைத்தொழு வார்க்கல்ல லில்லையே."* —பதிகம் 189 : 3

காவிரியில் வரும் செம்புனலில் கொய் மீன்கள் நிறைய இருந்தன என்று கூறப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் இக் காலத்தில் கொய் என்ற பெயரில் எந்த மீனும் வழங்கவில்லை. ஆனால், இலங்கையில் கொய் மீன் என்ற பெயர் இரண்டு வகைக் கடல்மீன்களுக்கு வழங்குகின்றது. எட்டு அங்குலம் இருக்கும் ஒருவகை மீன் கடற்கரையில் அகப்படுகின்றது. இதை ஆங்கிலத்தில் Five Spot Herring என்றழைக்கின்றனர். அறிவியலில் Maerura Kelee (Clupea Kanagurta) என்றழைக்கின்றனர். இந்த மீனைக் கொய்மீன் என்று தமிழிலும் சிங்கள மொழியில் 'கொய்யா' என்றும் அழைக்கின்றனர். மற்றொரு வகை மீனையும் இலங்கையில் கொய்மீன் என்றழைக்கின்றனர். ஆங்கிலத்தில் Long Ray Bonny Bream என்றழைக்கும் மீனைக் கொய்மீன் என்று ஈழநாட்டுத் தமிழில் அழைக்கின்றனர். சிங்கள மொழியில் 'கடற்கொய்யா' என்றழைக்கின்றனர். சிங்கள மொழியில் வழங்கும் பெயர் தமிழ்ப்பெயரே என்பது தெளிவாகும். சிங்கள மொழிப் பெயரான 'கடல் கொய்' என்பதிலிருந்து ஆற்றுக் கொய்மீன் இருப்பது தெளிவாக்கப்படுகின்றது. இந்த ஆற்றுக் கொய்மீனை அப்பர் காவிரிச் செம்புனலில் நிறையச் சென்றதாகக் கூறியுள்ளார். இந்தக் கொய்மீன் எதுவென்று உறுதியாகச் சொல்ல முடியாவிட்டாலும் முதலில் கூறிய Five Spot Herring ஆக இருக்கலாம். காவிரியில் வெள்ளம் வரும் காலத்தில் கடற்கரையில் வாழும் இந்த மீன் கூட்டமாக ஆற்றில் சென்றிருக்கலாம். அதையே அப்பர் தேவாரத்தில் குறிப்பிட்டார் என்று கருதலாம்.

பிற்காலத்தில் வீரசோழிய உரையில் கற்றலை என்றொரு மீன் குறிப்பிடப்பட்டுள்ளது. "கல்லுத்தலையின்கண் யாதொரு மீனுக்குண்டு, அம்மீன் கற்றலை" என்று கூறியிருப்பதால் கற்றலை என்ற மீன் பெயர் கி.பி. 11 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு வழங்கிவந்தது தெரிகின்றது. இந்த மீனைத் தற்காலத்தில் கத்தலை என்றும் கத்தாளை, கத்தாழை என்றும் அழைக்கின்றனர். கற்றாழைக்கும் இந்த மீனின் பெயருக்கும் யாதொரு

தொடர்புமில்லை. மக்கள் வாயில் பலவகையாக மாறும் பெயர் மயக்கமேயாகும். இந்த மீனிற்கு இயற்கையாகவே தலையில் கல் உண்டு. இந்த மீனின் காதில் பெரிய கல் இருப்பதை மீன் துறையாளர் குறிப்பிட்டுள்ளனர். (A remarkable feature is the pair of unusually large ear-stones ) இவ்வாறு கல் இருப்பதால்தான் இந்த மீனைக் கற்றலை என்று தமிழில் அழைத்தனர். நெய்யைத் தலையில் உடைய மீனை 'நெய்த்தலைக் கொழு மீன்' என்று நற்றிணை (291) கூறியிருப்பதை முன்னரே விளக்கியுள்ளேன். நெய்த்தலை என்ற சங்ககாலப் பெயரே இக்காலத்தில் நெத்திலி என்று வழங்குவதைப் போலவே கற்றலை என்ற பெயர் கத்தலை, கத்தாலை என்றெல்லாம் மாறியது. கற்றலைமீனை (Otolithus Spp) என்றழைப்பர். ஆங்கிலத்தில் இந்த மீனை (The Croakers) என்றழைப்பர்.

அயிரை என்ற மீனின் பெயர் சேரர்க்குரிய ஒரு மலையையும் ஆற்றையும் குறிப்பதைப் பதிற்றுப்பத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். பண்டைய தமிழகத்தில் மலைகளின் ஆறுகளில் மிகவும் உயரத்தில் இயற்கையில் மீன்களைக் காண்பது அரிது. ஆறுகள் சமவெளியை அடைந்த பின்னர் இயற்கையில் மீன்கள் இவ்வாறுகளில் காணப்படுகின்றன. ஆனால், அயிரை என்ற மீன் மட்டும் இந்த மலைக்குன்றுகளிலே உயரத்தில் குஞ்சு பொரித்து வாழ்கின்றது என்பதை மீன்துறையாளர் அறிஞர் டே (Dr. Day) கூறியுள்ளார். சேரநாட்டு மலைக்குன்றுகளிலும் ஈழத்து மலைக்குன்றுகளிலும் அயிரைமீன் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றது அரிய நிகழ்ச்சியேயாகும். மலைகளில் உயரத்தில் காணப்படும் ஆற்று நீர்ப்பரப்பில் இயற்கையில் மீன்கள் காணப்படாததால் அங்கு அரிதாகக் காணப்பட்ட அயிரைமீனின் பெயரால் ஒரு மலையையும் ஆற்றையும் அந்த மீனின் மிகுதி காரணமாகப் பெயரிட்டழைத்தனர் என்று கருத வேண்டும். ஆதலின் பதிற்றுப்பத்தில் அயிரை என்ற மீனின் பெயரால் மலையும் ஆறும் வழங்கப்பட்டன என்பது தெளிவாகும். அயிரை மலையையே ஐவர்மலை என்று இன்று மாற்றிக் கூறுவதாகக் கருதுகின்றனர்.

> *"நீரறன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்*
> *பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்*
> *சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய*
> *நேருயர் நெடுவரை யயிரைப் பொருந."*
>
> —பதிற்றுப்பத்து 21 : 26—29

பதிற்றுப்பத்தில் கொக்கின் கூரிய பார்வைக்கும் குத்துக்கும் அஞ்சாத அயிரை என்று கூறியிருப்பதைப் பார்க்கலாம். அயிரை மீன் எளிதில் அகப்படாத மீனாகும். நீரடியிலேயே காணப்படுவ

தோடு புள்ளியும் வரியுமுடைய உடலால் சூழ்நிலையில் மறைந்து விடக்கூடியது. இத்தகைய அயிரை மீனையும் பார்வையில் வல்ல கொக்கு வேட்டையாடிவிடும் என்பதைப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது.

ஒரு மீனின் பெயரால் ஒரு சங்ககாலத் தலைவன் பெயரே வழங்கியுள்ளது. கழார்த் துறைக்குரிய பரதவர் தலைவன் மத்தியை அகநானூறும் (211, 300) ஐங்குறுநூறும் (571) கூறியுள்ளன. இந்த மத்தி என்ற பெயர் மத்தி என்ற மீனின் (Sardine) பெயரால் வந்திருக்கலாம். மத்திமீன்தான் இன்று மேற்குக் கடற்கரையில் மிகுதியாகப் பிடிக்கப்பட்டு நிறைய ஊதியம் தரும் மீனாகும். இந்த மீனை வெளிநாடுகளில் மிகுதியாகப் பிடித்துப் பக்குவப்படுத்தி விற்கின்றனர். இந்த மீன் பல்லாயிரக்கணக்காக வலைகளில் கிடைக்கும். சங்கநூல்களில் இந்த மீனைக் குறிப்பிடவில்லையாயினும் இந்த மீனின் பெயராலேயே நெய்தல் நிலத்தலைவன் பெயர் வந்திருக்கும் என்று கருத இடமுண்டு. இவ்வாறு காய், பூ ஆகியவற்றின் பெயரால் வழுதுணைத்தழும்பன், முசுண்டன் என்ற பெயர்கள் சங்கநூல்களில் வழங்கினதையும் காணலாம்.

தேவாரத்திற்குப் பிறகு வந்த நூல்களில் புதியதாக எந்த மீன்களின் பெயர்களும் கூறப்படவில்லை. மிகப்பிற்காலப் பள்ளு நூல்களில்தான் பல மீன்களின் பெயர்கள் புதியதாகக் கூறப்பட்டுள்ளன. அப் பெயர்கள் பெரும்பாலும் நாட்டுமக்கள் வாயில் வழங்கிய பெயர்களாகும். இப் பெயர்களிலிருந்து இந்த மீன்கள் எவை என்று அறிந்துகொள்வது எளிதன்று. பள்ளு நூல்களில் கூறப்பட்ட மீன்வகைகள் வேறொரு கட்டுரையில் ஆராயப்படும். சங்க நூல்களில் சொல்லப்பட்ட மீன்களின் பெயர்களே மிகப்பிற்காலத்திலும் இலக்கியத்தில் வழங்கின என்பது குறிப்பிடத்தக்கதாகும். சங்க காலத்திற்குப் பிறகு பல வகை மீன்களைத் தெரிந்து தெளிந்து கூறும் போக்கு காணப்படவில்லை. மிக மிகப் பிற்காலத்திய பள்ளு நூல்களில்தான் மீன் வகைகள் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன.

எடுத்தாளப்பட்ட நூல்கள்

1. Fishes of India—Volume I and II—Francis day F.L.S.

2. The Marine and Fresh Water Fishes of Ceylon—Ian S.R. Munro M Sc.

3. A guide to the Fresh Water Fauna of Ceylon—Bulletin No. 12. Department of fisheries, Ceylon.

4. The Common Food fishes of the Madras State—Department of Industries and Commerce 1953.

———

# கன்னடத்தில் கன்னித்தமிழ்

[இரா. மதிவாணன்]

பழங்கன்னடத்துக்கும் தமிழுக்கும் உள்ள உறவு மிகப் பழைமையானது. இவ்வுறவை இலக்கண அடிப்படையிலான உறவு, இலக்கிய அடிப்படையிலான உறவு, வரலாற்றடிப்படையிலான உறவு, பண்பாட்டு அடிப்படையிலான உறவு, நாகரிக அடிப்படையிலான உறவு, சமய அடிப்படையிலான உறவு, குமுகாய அடிப்படையிலான உறவு, கலைத்துறை அடிப்படையிலான உறவு எனப்பலவகைகளில் கண்டு மகிழலாம்.

முதலில் இலக்கண அடிப்படையிலான உறவைக் காண்பது, எந்தக்காலத்தில் கன்னடம் தனிமொழி நிலையை எய்துதற்கான தொடக்கத்தைப் பெற்றிருக்கும் என்பதை அறியத் துணைபுரியும்.

பழங்கன்னடம்

கி.பி. 12ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்ட கன்னடம் பழங் கன்னடம் என்று கருதப்படுகிறது. பழங்கன்னடத்தில் உள்ள மெய்யீற்றுச் சொற்கள் புதுக் கன்னடத்தில் உகர ஈற்றைப் பெறுகின்றன. மகரம் வகரமாகிறது. பகரம் ஹகரமாகிறது. வகரம் முழங்கொலி பகர (ba) மாகிறது. வேற்றுமை உருபு களும் காலங்காட்டும் இடைநிலைகளும் வேறுபடுகின்றன. பல பெயர்ச் சொற்கள் இடைக் குறையாகின்றன. குறிப்பிடத்தக்க இந்த ஆறு வேறுபாடுகள் பழங்கன்னடத்தைப் புதுக்கன்னடத் திலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன.

| | தமிழ் | பழங்கன்னடம் | புதுக்கன்னடம் | |
|---|---|---|---|---|
| 1. | நான் | நான் | நானு | —உகரச் சேர்ப்பு |
| | நீ | நீன் | நீனு | |
| 2. | எமக்கு | எமகெ | எவகெ | —ம>வ |
| | தமர் | தெமர் | தெவர் | |
| 3. | பால் | பால் | ஹாலு—ப>ஹ | |
| 4. | வந்தனன் | பந்தன் | பந்தனு | —வ>ப (ba) |
| | வால் | பால் (bal) | பாலு | |
| 5. | பொழுது | பொள்து | ஹொத்து—இடைக் குறை | |
| 6. | வரைகின்ருன் | பரெதபம் | பரெயுத்தானெ | |
| | வரைவான் | பரெவம் | பரெயுவனு | |

நல்லது என்னும் பொருளில் தெலுங்கில் மண்சிதி (மாண்டது) என்னும் பழஞ்சொல் வழக்கிலிருப்பது போன்றே கன்னடத்தில் ஒள்ளிது (சிறந்தது) என்னும் பழந்தமிழ்ச்சொல் இன்றும் பேச்சு வழக்கில் உள்ளது.

அது ஒள்ளிது அவனு ஒள்ளியவ (அ) ஒள்ளியோனு அவளு ஒள்ளியோளு அது இனிது, அவனு இனியனு, அவளு இனியளு. இக் கன்னடத் தொடர்மொழிகளுக்குத் தமிழில் விளக்கம் தேவையில்லை.

கன்னடத் தோற்றம் :

வட நாட்டில் வழங்கிய பிராகிருத மொழியின் தாக்கம், நடுவணிந்திய பழந்தமிழ் அல்லது முந்து திரவிட மொழியில் ஏற்பட்டபோது கன்னடம் தனிமொழி நிலையை அடைதற்கான தொடக்கக் கிளைமொழிக் கூறுகளைப் பெறத் தொடங்கியது என்பதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. பிராகிருத மொழியின் தாக்கத்தால் வடமொழியிலும் பகரம் ஹகரமாயிற்று. எ-டு— கோபுரம்—கோஹுரம் பஞ்சரம்—ஹஞ்சரம். பிராகிருதத் தாக்கத்தால் வடமொழியில் ஒருசார் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டனவோ அதே மாற்றங்கள் கன்னடத்திலும் ஏற்பட்டுள்ளன. பழங்கன்னடத் தாக்குதலால் பிராகிருத மொழியிலுள்ள பழைய நூல்களில் கன்னடச் சொற்கள் புகுந்துள்ளன.[1] கன்னடத்தில் பகரம் ஹகரமாதல், மகரம் வகரமாதல், வகரம் பகரமாதல், உகரவீறு பெறுதல் ஆகியவை சமண சமயம் பரப்ப வந்த பிராகிருத மொழியினராலேயே ஏற்பட்டது[2] எனலாம். புத்த சமயம் பரப்ப வந்த பாலி மொழியினராலும் பைசாச பிராகிருத தாக்கத்தாலும் தெலுங்கு தனிமொழி நிலைக்குத் தள்ளப்பட்டது போலவே நடுவணிந்தியாவில் பேசப்பட்டுவந்த முந்து தமிழ் கன்னடமாகத் திரிய நேர்ந்தது.

கன்னட நெடுங்கணக்கு—னகரச் சிறப்பெழுத்து.

பழங்கன்னட முதலெழுத்துகள் 47. பிற்காலத்தில் மேலும் ஐந்து வடவெழுத்துகளைச் சேர்த்து 52 ஆக்கி விட்டனர். தமிழ்ச் சிறப்பெழுத்துகளான எ, ஒ, ழ, ற, ன என்னும் ஐந்தில் னகரம் நீங்கிய நான்கும் பழங்கன்னட நெடுங் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளன. கன்னடப் பேச்சு வழக்கில் னகர ஒலிப்பு இருந்தாலும் எழுத்து வழக்கில் இல்லை.

நானு, நீனு, ஏனு, அவனு எனும் சொல்லாட்சிகளில் மக்கள் னகரத்தைச் செம்மையாக இன்றும் ஒலிப்பதை உற்று

---

1. *கர்னடக ப்ராசீன தர்சன. (பக் - 50).*
2. *சப்தமணி தருப்பணம் முன்னுரை (பக் - 79).*

நோக்கி அறியலாம். ஆயினும் இச் சொற்களை எழுதுங்கால் நாநு, நீநு, ஏநு, அவநு எனத் தந்நகரமாகவே எழுது கின்றனர்.

னகரம் முன்னண்ண மெல்லொலி (alveolor nasal) நகரம் நுனிநா மீப்பல் மெல்லொலி (dental nasal) இரண்டும் பிறக்கும் இடத்தால் வேறுபாடுடையன. மலையாளத்தில் கசட தப எனும் ஐந்து வருக்க எழுத்துகளைப் போலவே றகரம் ஆருவது வருக்க மாகக் கருதப்பட்டு அதன் இனமெல்லெழுத்தான னகரம் நெடுங் கணக்கில் சேர்க்கத் தகும் எனக் குண்டெர்டு கூறியுள்ளார்.[1] பேரா. பரோ எமனேவர் தம் திரவிட அகர முதலியில் 'ந, ன ஆகிய இரண்டும், தமிழிலும் மலையாளத்திலும் வழங்குவதால் முந்து திரவிடத்திலிருந்த தனித்த இரண்டு ஒலியன்களே என் பதற்குச் சான்ருகின்றன. எனினும், இது மேலும் தெளிவு படுத்தப்பட வேண்டும்' எனக் குறித்துள்ளனர். இந் நிலை கன்னடத்துக்கும் பொருந்தும். இலக்கண ஆசிரியரும் மொழி நூலாரும் இனியேனும் கன்னடத்திலுள்ள னகர ஒலிப்பறிந்து னகர மெய்யைச் சேர்ப்பது ஏற்புடைத்து. தெலுங்கிலும் 'வான' (மழை) எனும் சொல் 'வாந' என எழுதப்படினும் னகரமாகவே பேசுங்கால் ஒலிக்கப்படுதல் ஒப்பு நோக்கத்தக்கது.

---

### மாணவர் கருத்தாய் இருத்தல் வேண்டும்

*தன்னைப் பெற்ற தாயைக் கொல்லுந் தறுகணன் போலத் தன்னை அறிவுபெற வளர்த்துப் பெருமைப் படுத்திய தமிழைச் சீர்குலைக்கும் போலித் தமிழ்ப் புலவரைப் பின்பற்றி நடவாமல் தமிழை உள்ளன்புடன் ஓம்பித் தூய்தாய் வழங்கும் உண்மைத் தமிழாசிரியர்களைப் பின்பற்றி நடத்தலிற் றமிழ் நன்மாணவர் அனைவருங் கருத்தாயிருத்தல் வேண்டும்.*

— மறைமலையடிகள்
(தமிழர் மதம், பக். உ௬0)

---

1. Malayalam English Dictionary—Gundert. (Page - 500).

2. n, ṉ Tamil and Malayalam seem to have evidence for two phonemes in P Dr. But the matter is not yet clear. (Intro. XIII. D. E. D.)

# பிளவுபட்ட கூரை

[இரா. இளங்குமரன்]

''அ............ன்''

''மேலே காட்டிய குறியின் பொருள் யாது?

''தமிழ் நாட்டில் தேசியக் கல்வி நடைபெற வேண்டுமாயின் அதற்கு அகர முதல் னகரப் புள்ளி இறுதியாக எல்லா விவகாரங்களும் தமிழ் மொழியில் நடக்கவேண்டும் என்பது பொருள். ஆரம்ப விளம்பரம் தமிழில் பிரசுரம் செய்யவேண்டும். பாடசாலைகள் தொடங்கினுல் அங்கு நூல்களெல்லாம் தமிழ் மொழி வாயிலாகக் கற்பிக்கப் படுவதுமன்றிப் பலகை குச்சி எல்லாவற்றுக்கும் தமிழிலே பெயர் சொல்ல வேண்டும். 'சிலேட்' 'பென்சில்' என்று சொல்லக்கூடாது.''

—இஃது ஒருவர் எழுத்து.

''கும்பகோணம் தமிழாசிரியர் ஒருவர்; அவர் இலக்கணமாகவே பேசுவார்; பிறர்க்கு எளிதில் விளங்கவேண்டும் என்பதை நினையாமல் தமிழ் நாட்டில் வழக்கத்தில் வந்த சில வேற்று மொழிச் சொற்களை அவ்வாறே வழங்காமல் மொழி பெயர்த்துக் கூறுவார். பிள்ளைகளிடம் பேசும்பொழுது 'சிலேட்' என்று சொல்லாமல் கற்பலகை என்றே சொல்லுவார். இப்படிப் பேசினுல்தான் தம்மைத் தமிழ்க் கல்வியிற் சிறந்தவராக யாவரும் கருதுவார்கள் என்பது அவர் எண்ணம். அங்ஙனமே அநேகர் எண்ணி நடப்பது உண்டு.''

—இஃது இன்னெருவர் எழுத்து.

இரண்டு பகுதிகளையும் மீண்டும் படித்துப் பார்க்க வேண்டும். எண்ணியும் பார்க்க வேண்டும். இரு பகுதிகளுக்கும் உள்ள முரண்பாட்டை எடைபோட்டுப் பார்க்கவேண்டும். அப்படிப் பார்த்தால் முன்னவர், மொழி வளர்ச்சியில் ஊறியவர் என்றும், மொழிப்பற்றுளர் என்றும், பின்னவர், மொழிவளர்ச்சி பற்றிக் கவலையேதும் இல்லாமல் வந்த சொற்களை யெல்லாம் வாரிக்கொள்ளவேண்டும் என்னும் கருத்துடையவர் என்றும் ஒருவேளை எண்ணி முடிவுக்கு வந்துவிடுவோம். அதற்குரிய சான்றினைக் காட்டி நிலைநிறுத்தவும் துணிவோம். ஆனுல் இருவேரும் கருத்துக்களையும் கூறிய சான்றோர்களின் பெயர்களைக் குறித்துக் காட்டினுல் நாம் செய்த முடிவுக்கு அஞ்சுவோம்; நாணவும் செய்வோம்.

பாவலர் பாரதியார் உரை முன்னது!

தமிழ்த் தாத்தா சாமிநாதையர் உரை பின்னது!

இவ்விரு பெருமக்களும் தமிழ்மொழி வளர்ச்சியில் வேறுபட்ட எண்ணம் உடையவர்களா? தமிழ்த் தொண்டில் மாறுபட்டவர்களா? தமிழ் வாழ, வளர எண்ணியதன்றி, அதனை

வளர்த்து வளமாக்கப் பாடுபட்டதை எவரறியார்? இருப்பினும் மொழி வளர்ச்சிக் கருத்தில் இவர்களுக்கு அமைந்த முரண்பாடு பெரிது! இன்றும் இந்நிலை மாருமலேதான் இருக்கின்றது. இதனைச் சான்று காட்டி விளக்க வேண்டுவதில்லை. கண்ணும் காதும் உணர்வும் அமைந்த அனைவருக்கும் வெளிப்படை யாகவே விளங்குகின்றது!

அருளாளர் ஆபிரகாம்லிங்கன் பெருமைமிக்க சொற் பொழிவுகளிலே ஒன்று, ''பிளவுபட்ட கூரை பிழைக்காது'' என்பது. நம் மொழி நிலைமையை எண்ணிப் பார்க்கும்போது பிளவுபட்ட கூரையே முன்னிற்கிறது.

நம் மொழிப் பிளவு என்ன?

மொழிக்குக் கண்ணெனை மதிக்கத் தக்க அறிவறிந்த சான்ருேர்களிடத்தும் மொழிவளர்ச்சி, மொழிக்காவல் பற்றிய கருத்துக்களில் ஒருப்பட்ட எண்ணம் இல்லை. அந்தப் பிளவே மொழிப்பிளவாகித் தமிழ்த் தாயின் முகத்தில் மாரு வடுக் களாகத் தோன்றுகின்றன.

''வேற்று மொழிச் சொற்கள் புகுதல் கூடாது. வேற்று மொழி எழுத்துக்கள் புகுதல் அறவே கூடாது. அவ்வாறு இன்றி ஒரொரு கால் புகநேரின் தமிழின் இயல்புக்கு ஏற்ப ஒலி யமைப்புப் பெற்று முழுமையாகத் தமிழ்ச் சொல்லாகவே காட்சி யளிக்கவேண்டும்'' என்பது முழு முதல் இலக்கண நூல்விதி. இதனை வகுத்துக் காட்டி மொழி வாழ்வாங்கு வாழ வகை கண்ட, ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' மொழிக் காப்பாளன் அல்லனே! அவன் வழியைத் தெளிவாக ஆராய்ந் தறிந்தும் அவ் வழியில் நின்று மொழியைப் பேணுமல் சிலர் செல்ல, சிலர் அதைப் பேணி நிற்க அமைந்தமை பிளவு இல்லையா! பேணி நிற்பாரையும் பேணுதாரையும் மாறி மாறிப் பாராட்டியும் பழித்தும் பல்லாயிரம் தமிழர் பொழுது போக்க, 'மொழிவெறி' என்றும், 'மொழிக்கொலை' என்றும் 'பட்டங்கள்' சூட்டிப் பிரித்துப் பிரித்துக் கெடுக்க உண்டான பிளவு நிலை மொழிக் காவல் ஆகுமா? அவர்களும் மொழிக் காவலர் ஆவரா?

உடையில் கறை படுதல் கூடாது. வீட்டுள் குப்பை கிடத்தல் கூடாது. உடலில் அழுக்குப் படிதல் ஆகாது. வழியில் பள்ளம் மேடு நாற்றம் ஆகியவை அமைதல் கூடா. அரிசி பருப்பு எண்ணெய் முதலாம் பண்டங்களில் கலப்பு ஆகா! இவ் வளவும் விரும்புவோம்; ஏற்போம். முரண்பட்டால் பழிப்போம்! ஆனல், மொழிக் கலப்பையும் மொழிச் சிதைவையும் முடிந்த அளவும் செய்வோம்! மொழிக் கொலையும் துணிந்து செய் வோம்!

பாரதியார் மொழிக் குழப்பமும் சிதைவும் கலப்பும் மிக்க காலத்தே இருந்தார். ஆங்கில 'மோகமும்' வடமொழிக் கலப்பும் உச்சநிலை உற்றிருந்த சூழ்நிலையில் வாழ்ந்தார். தமிழ்ச் செய்தித் தாள்களும், தமிழ் மேடையும், தமிழ்க் கல்வி நிலையங் களும் காண்டற்கரிய காலநிலையில் வாழ்ந்தார். அந் நிலையிலும் அவர் கொண்டிருந்த மொழிப் பற்றையும் வளர்ச்சி நோக்கத்தை யும் எடை போட்டுப் பார்க்கும்போதுதான் அவர் பெருமை புலனாகும். அவர் உழைப்பும் தெளிவாகும்.

'மெம்பர்' என்னும் ஆங்கிலச் சொல்லை ஆங்கிலம் கற்ற வரன்றிப் பிறரும் அறிவர். தமிழ் மட்டுமே சிறிது கற்றவரும்— ஏன்? பள்ளியுள் கால்வைத்து அறியாதவர்கூட இந் நாளில் மெம்பர் என்னும் சொல்லுக்கு ஏற்ற தமிழ்ச் சொல்லை அறிவர். ஆனால் பாரதியார் இச் சொல்லைத் தமிழாக்க எப்பாடு பட்டார்? அவரே எழுதுகின்றார்.

''மெம்பர் என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் எனக்கு அகப்படவில்லை. இது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். 'அவயவி' சரியான வார்த்தை இல்லை. 'அங்கத்தான்' கட்டிவராது. 'சபிகன்' சரியான பதந்தான். ஆனால் பொதுமக்களுக்குத் தெரி யாது. யாரேனும் பண்டிதர்கள் நல்ல பதங்கள் கண்டு பிடித்துக் கொடுத்தால் புண்ணியமுண்டு. அரை மணிநேரம் யோசித்துப் பார்த்தேன். 'உறுப்பாளி' ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனத்திற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்? கடைசியாக 'மெம்பர்' என்று எழுதிவிட்டேன். இன்னும் ஆற அமர யோசித்துப் பார்த்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொரு முறை சொல்லுகிறேன்''.

பாரதியார் கால நிலையில் இன்று தமிழ் இல்லை. தமிழ் தனிமொழி, உயர்மொழி, செம்மொழி என்று பிறநாட்டவர் களாலும் உறுதிசெய்யப் பெற்றுவிட்டது. உலகின் முதல் தாய் மொழி தமிழே என உறுதிப்படுத்தும் மொழிப் பேரறிஞர்களும் உளர். அவ்வாறாகவும், 'பிடிவாதமாகவே' தம்மால் முடிந்த அளவும் பிறமொழி எழுத்துக்களையும் சொற்களையும் வாரி வாரிக் கொட்டி எழுதுவதும் பேசுவதும் 'நாகரிகம்' என்று கருதிக் கொண்டிருப்பவர்களுக்கும், அவர்களுக்குத் துணை போபவர் களுக்கும் அளவு இல்லை. வரிந்து கட்டிக் கொண்டு தம்மை அப் பணிக்கே ஆட்படுத்திக் கொண்டவர்களும் 'திருவுலா' வரு கின்றனர். தூயதாகப் பேசவும் எழுதவும் ஆற்றலும் திறமும் உடையவரும் வேண்டுமென்றே கலவையில் குழம்பும்-குழப்பும்-வல்லாண்மை தமிழ்மொழிக் கென்றே வாய்த்தது போலும்! இந் நிலைமை மாறுவது எந்நாளோ? மாற்றுவதும் எந்நாளோ?

நன்றி: குறள்நெறி, 1—6—64.

## தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி
## தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு

தமிழகத்திலுள்ள பல புலவர் கல்லூரிகளில் சென்னை, மதுரைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டத் தேர்வு வகைக்குப் பயின்று வரும் மாணவர்களை ஊக்குவிக்கும் வகையில் ஆண்டு தோறும் இச் சங்கத்தார் நடத்திவரும் தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வில் இவ்வாண்டு (1976 பிப்ரவரியில்) நடைபெற்ற தேர்வில் தேர்ச்சி பெற்றவர்கள், பரிசு பெற்றவர்கள் விவரம்.

### வித்துவான் முதனிலை

| தேர்வு எண். | முகவரி | பரிசு | தொகை |
|---|---|---|---|
| 1104 | ஆ. சரவணப் பெருமாள், திருவானைக் கோவில்—தமிழ்க்குடில் | முதற்பரிசு | 40 00 |
| 1155 | ச. லலிதா, கரந்தைப் புலவர் கல்லூரி—கரந்தை | 2 வதுபரிசு | 30 00 |
| 1191 | வி. ராஜமோகன், செந்தமிழ்க் கல்லூரி—திருப்பனந்தாள் | 3 வதுபரிசு | 20 00 |

### வித்துவான் இறுதிநிலை

| தேர்வு எண். | முகவரி | பரிசு | தொகை |
|---|---|---|---|
| 984 | கே. சத்திய பாமா, பல்கலைக் கல்லூரி—தருமபுரம் | முதற்பரிசு | 50 00 |
| 914 | க. இலட்சுமி, திருவானைக் கோவில்—தமிழ்க்குடில் | 2 வதுபரிசு | 35 00 |
| 918 | வி. செயச்சந்திரன், கரந்தைப் புலவர் கல்லூரி—கரந்தை | 3 வதுபரிசு | 25 00 |
| | | | 200 00 |

குறிப்பு: மொத்தம் முதனிலைத் தேர்வில் இரண்டாம் வகுப்பில் 12 மாணவர்களும், மூன்றாவது வகுப்பில் 28 மாணவர்களும், இறுதி நிலைத் தேர்வில் முதல் வகுப்பில் ஒருவரும், 2 வது வகுப்பில் 10 மாணவர்களும் மூன்றாவது வகுப்பில் 30 மாணவர்களும் தேர்வு பெற்றுள்ளனர்.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## தொல்பொருள் ஆய்வுத்துறை மாநாடுகள்

தமிழக அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஒவ்வொரு மாவட்டத்திலும் வரலாற்றுத் தொடர்பான மாநாடுகளும் பொருட் காட்சிகளும் நடத்துவதெனத் திட்டமிட்டுள்ளனர். ஒவ்வொரு மாவட்டமும் கலை, இலக்கியம், சமயம், கல்வெட்டு, நாட்டுப்புறக் கலைகள் ஆகிய துறைகளில் அடைந்துள்ள சிறப்புகள் பற்றி இம் மாநாடுகள் ஆராயும். அந்தந்த மாவட்டங்களிலுள்ள தொழில்துறை, வேளாண்மைத் துறைகளில் ஈடுபட்டுள்ளோரும், வரலாற்றுப் பேரவையின் கிளையினரும் இதில் பங்கேற்பர். முதலாவதாக, தஞ்சை மாவட்ட மாநாடு, ஆகஸ்ட் 14, 15 ஆம் நாள்களில் குடந்தையில் நடைபெறும்.

1977 சனவரித் திங்களில், சென்னையில் மாநில வரலாற்று மாநாடு நடைபெறும் என டாக்டர் இரா. நாகசாமி அறிவிக்கிறார்.

## தில்லைக் கோவிலில் தெய்வச் சிலைகள் கண்டெடுக்கப்பட்டன

சிதம்பரம் கோவிலுக்குள் உள்ள ராஜசபைக்கு மேற்புறத்தில் நெடுங்காலமாகத் திறக்கப்படாமலிருந்த மண்டபமொன்றைக் கடந்த 24-6-76 இல் ஓர் அருச்சகர் துணிந்து திறந்து பார்த்தார். அப்போது அதனுள் 80 வெண்கலச் சிலைகள் காணப்பட்டன. அவற்றுள் மூன்று சிலைகள் நடராசர் சிலைகளாகும். தொல்பொருள் ஆய்வுத் துறையினர் இச் சிலைகளின் மதிப்பு மூன்று கோடிக்கு மேல் இருக்கும் எனக் கருதுகின்றனர்.

## இலண்டனில் திருப்புகழ்

இசைப் பேரரசி சேலம் செயலட்சுமி பாடிய திருப்புகழ்ப் பாடல்களை இலண்டனிலுள்ள டாக்டர் டேவிட் செர்மன் என்பார் இசைத் தட்டுகளாக வெளியிடுவார் என 20-6-76 இல் சென்னையில் நடைபெற்ற சேலம் செயலட்சுமியின் பாராட்டு விழாவில் அறிவிக்கப்பட்டது. இசைப் பேரரசியைப் பாராட்டி டாக்டர் மெ. சுந்தரம் அவர்களும் எச். எம். வி. கிராமபோன் கம்பெனி, சரஸ்வதி ஸ்டோர்ஸ் ஆகியவற்றின் சார்பாகத் திரு கண்ணனும் மற்றும் பலரும் பேசினர்.

## உலகின் மிகப் பெரிய கோபுரம்

டொரான்டோ என்னுமிடத்தில் 542 மீட்டர் உயரமுள்ள கான் கிரீட் கோபுரம் ஒன்று அண்மையில் கட்டி முடிக்கப்பட்டுள்ளது. உலகின் மிகப் பெரிய கோபுரம் எனக் கருதப்படுகின்ற இதனைக் கட்டி முடிக்க 57 மில்லியன் டாலர்கள் செலவாயிற்றாம். இதில் சுழன்று கொண்டேயிருக்கும் சிற்றுண்டிச் சாலையொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் 480 பேர் அமரவும், தொலைக்காட்சி, வானொலி ஆகியவற்றைக் கண்டும், கேட்டும் மகிழவும் கூடிய வசதிகள் அமைக்கப் பெற்றுள்ளன.

## காரமிக்க உணவுகளால் புற்று நோய் வரக்கூடும்

அதிகக் காரமான உணவுகளை அடிக்கடி உண்போருக்கும், வெற்றிலை பாக்குப் போடுபவர்களுக்கும் பலவகைப் புற்று நோய் வரக் கூடும் என்று பெங்களூர் சித்தரஞ்சன் தேசீய புற்றுநோய் ஆராய்ச்சி நிலையத்தின் இயக்குநர் டாக்டர் பி. கே. ராவ் கூறுகிறார்.

## செவ்வாயைச் சுற்றிவரும் செயற்கைக் கோள்

அமெரிக்கா அனுப்பிய 'வைக்கிங்'-1 என்னும் செயற்கைக் கோள் செவ்வாய் மண்டலத்தைச் சுற்றி வந்துகொண்டிருக்கிறது. அதில் பொருத்தப் பட்டிருக்கும் நிழற்படக் கருவிகள் செவ்வாயின் மேற்பரப்பைப் படம் பிடித்து அனுப்பியவண்ணம் இருக்கின்றன. செவ்வாயின் மேற்பரப்பு மிகக் கடினமானதென்றும் அங்கு மனிதன் இறங்குவது பாதுகாப்புக்குரியதன்று எனவும் அறிவியலறிஞர்கள் கருதுகின்றனர். எனினும் முயற்சிகள் தொடருகின்றன. பின்னர் வந்த செய்திகளின்படி செவ்வாயில் நீர் நிலைகள் இருக்கக் கூடுமென்று அறிவியலார் கூறுகின்றனர். அத்துடன் சூலைத் திங்கள் 17 ஆம் நாள் பிற்பகல் 3 மணி அளவில் வைக்கிங்கோள் செவ்வாய் மண்டலத்தில் இறங்கும் என்றும் கூறப்படுகிறது.

## கீசகன் சிலை கண்டெடுக்கப்பட்டது

இந்தூருக்கு அண்மையிலுள்ள கலிபீத் என்னும் சிற்றூரில் கடந்த சூன் திங்கள் முதல் கிழமையில் 11 அடி உயரமுள்ள கற்சிலையொன்று தோண்டி எடுக்கப்பட்டது. இது 12 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது எனவும் மாபாரத காப்பியத்தில் கூறப்படும் கீசகன் என்னும் அரக்கனின் உருவம் என்றும் அங்குள்ளோர் கருதுகின்றனர். இதனை ராஜகிரகம் என்னுமிடத்திலுள்ள பொருட்காட்சிச் சாலையில் வைத்துள்ளனர்.

## சோழர் காலப் பொற்காசுகள் கண்டெடுக்கப்பட்டன

தஞ்சை மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டத்தில் காட்டுக் குறிச்சி என்னும் சிற்றூரில் ஒரு வீட்டின் பின் புறத்தில் முனியன் என்னும் வேலைக்காரன் மண்ணைத் தோண்டிக்கொண்டிருந்தபோது ஓர் உடைந்த பித்தளைப் பாண்டத்தைக் கண்டெடுத்தான். அதனுள் மிகச் சிறிய பொற்காசுகள் காணப்பட்டன. அவற்றில் அம்மன் உருவம் பதிக்கப்பட்டிருந்தது. அவை சோழர் கால நாணயங்கள் என்று கூறப்படுகின்றன.

## பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைப் பற்றிய கருத்தரங்கு

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைப் பற்றிய கருத்தரங்கு 10-7 76 மாலை சென்னை மயிலை சீனிவாச சாத்திரி மண்டபத்தில் பேராசிரியர் கே. ஆர். சீனிவாச ஐயங்கார் அவர்கள் தொடங்கி வைக்கப், பேராசிரியர்கள் டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், கி. வா சகந்நாதன், அ. ச. ஞானசம்பந்தம், மு. அருணாசலம், ந. ரா. முருகவேள் ஆகியோர் பிள்ளையவர்களைப்பற்றிய பலதலைப்புகளில் உரையாற்றினர்.

## திருக்குறள் கருத்தரங்கு

தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இணைந்து நடத்தும் திருக்குறள் கருத்தரங்கு, இத் திங்கள் 9, 10, 11 ஆம் நாள்களில் சென்னை வள்ளுவர் கோட்டத்தில் சிறப்புற நடைபெற்றது. தமிழக ஆளுநர் மேதகு மோகன்லால் சுகாதியா அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கி, கருத்தரங்கினைத் துவக்கி வைத்தார். விழாவினை யொட்டி சை. சி. நூற்பதிப்புக் கழகத்தினரால் அமைக்கப் பட்டிருந்த திருக்குறள் நூற் காட்சியில் உலகின் பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ள திருக்குறள் பதிப்புகளும், ஆராய்ச்சி நூல்களும், உரையாசிரியர், ஆராய்ச்சியாளர், மொழி பெயர்ப்பாளர் உருவப் படங்களுடன் இடம் பெற்றிருந்தன. இவ் விழா பற்றிய முழு விவரங்களும் அடுத்த இதழில் இடம் பெறும்.

## கருநாடக மாநில முதல்வர் பெயர்?

கருநாடக மாநில முதல்வரின் பெயர் தேவராஜ் அர்ஸ் என்றே ஆங்கில இதழ்களிலும், தமிழ் இதழ்களிலும் குறிப்பிடப்பட்டு வருகிறது. ஆனால், அவரது சரியான பெயர் தேவராஜ அரசு என்பதே ஆகும். கன்னட இதழ்களிலும் இங்ஙனமே குறிப்பிடப் படுகின்றன.

குறிப்பு: இச் செய்தியைத் திரு. இரா. மதிவாணன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

## பேராசிரியர் புருடோத்தம நாயுடு மறைவு

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராயிருந்தவரும் நாலாயிரம் என்னும் நூலின் உரையைத் தமிழில் ஆக்கியவருமான, பேராசிரியர் புருடோத்தம நாயுடு அவர்கள் 28—6—76 இல், சென்னை, கருணாநிதி நகரிலுள்ள தம் மகள் இல்லத்தில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். மறைந்த பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## "வார்னிஷ்" குடித்துப் பலர் மடிந்த அவலச் செய்தி

'வார்னிஷ்' எனப்படும் பூச்சுநெய்யினைக் குடித்த காரணத்தால் இதுவரை 113 பேர் மாண்ட அவல நிகழ்ச்சி கடந்த 4-7-76 இல் சென்னையில் நடைபெற்றது. 'வார்னிஷ்' சில வேளைகளில் மதுவாகப் பயன்படுத்தப் படுகிறது. அவ் வகையில் சென்னை அயன்புரத்தில் ஒரு கடையில் விற்கப்பட்ட வார்னிஷைக் குடித்தவர்கள், அதில் விஷச்சாறு கலந்திருந்த காரணத்தால் மாண்டனர். "துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண் பவர்" என்னும் வள்ளுவர் வாக்கு ஈண்டு நினைவுகூரத் தக்கது.

———

# மதிப்புரை

## அறவிளக்கு

[ஆசிரியர் : கோ. சிவகுருநாதன், எம்.ஏ., கிடைக்குமிடம் : 11-B. விரிவுரையாளர் குடியிருப்பு, அழகப்பாபுரம், காரைக்குடி-3. விலை : ரூ. 4-50]

அறத்தை வலியுறுத்து முறையில், புறநானூறு, மணிமேகலை ஆகிய நூல்களினின்று எடுக்கப் பெற்ற கருத்துகளின் கோவையே இந்த 'அறவிளக்கு' என்னும் நூலாகும். இதன்கண் ஆறு கட்டுரைகள் உள்ளன. ஒவ்வொரு கட்டுரையும் ஒவ்வோர் அறத்தை வலியுறுத்துகின்றது. ஐந்தாவது கட்டுரையின் தலைப்பே நூலின் தலைப்பாக அமைந்துள்ளது. நூல் நல்ல தமிழ் நடையில் அமைந்துள்ளது. இலக்கிய ஆராய்ச்சி செய்வோர்க்கு உறுதுணை செய்யும் நூல்களுள் இதுவும் ஒன்றெனலாம்.

## இருபதில் சிறுகதைகள் (1900—1973)

[ஆசிரியர் : தா. ஏ. பியூலா மெர்சி, எம்.ஏ., கிடைக்குமிடம் : சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1-140 பிரகாசம் சாலை, சென்னை-1. விலை: ரூ. 6]

இந் நூலில் இருபதாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற பல்வேறு சிறுகதைகள் பற்றிய ஆராய்ச்சிக் குறிப்புகள் அடங்கியுள்ளன. கதைகளின் இயல்பு, ஆசிரியர்களைப் பற்றிய குறிப்பு இன்னபிற பயனுள்ள செய்திகளும் இடம் பெற்றுள்ளன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் சிறுகதைகள் பற்றிய சுருக்கத் திறனாய்வு நூல் எனலாம். டாக்டர் மு. வ. அவர்களின் அணிந்துரையுடன் கூடியது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# பிறபதிப்பாளரின் புதிய வெளியீடுகள்



———

பதிவு எண் : M. 4899

# கழகப் புதிய வெளியீடுகள்

## வள்ளுவர் கோட்டம் - ஒரு வையகப் புதுமை

*(கழகப் பண்பாட்டு வரிசை நூல்—1)*

வையகப் புதுமைகளுள் ஒன்றாகக் கருதத்தக்க சென்னை வள்ளுவர் கோட்டத்தின் அமைப்பு—சிறப்பு—வள்ளுவர்சிலை— திருத்தேர் அமைப்பு — குறள் மணிமாடம் — மணி மண்டப மாண்பு ஆகியவற்றைப் பற்றிச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது இச் சிறு வெளியீடு. வள்ளுவர் கோட்டத்தினைக் காணச் செல்வோர்க்கு வழிகாட்டும் கையேடாகப் (Guide) பயன்படத்தக்கது. அழகிய முகப்புப் படத்துடன் கூடியது.

விலை காசு 30

## ஆப்பிரிக்கச் சுற்றுலா

*—தவத்திரு சுத்தானந்த பாரதியார்*

தவத்திரு பாரதியார் அவர்கள் அண்மையில் ஆப்பிரிக்க நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து ஆற்றிய கடவுட் பணியும், கலைபணியும், சமயச்சொற்பொழிவுகளும் இதன்கண் கூறப் பட்டுள்ளன. இச் சுற்றுலா நூலைப் படிப்பதன் மூலம் அயல் நாடுகளில் வாழும் தமிழ் மக்களின் மொழிப் பற்று, சமயப் பற்று ஆகியவற்றை நன்கு அறிந்து கொள்ளலாம். ரூ. 7 50

## திருவருணைக் கலம்பகம்—உரை

*—உரையாசிரியர்: புலவர் இரா. இளங்குமரன்*

சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய திருவருணைக் கலம்பகம் கலம்பக இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தி சொற் சுவையும் பொருட்சுவையும் கூடிய சிறந்த நூலாகும். இந்நூல் பி. ஏ. மாணவர்க்குப் பாடமாக வைக்கப் பெற்றுள்ளதால் மாணவர்க்குப் பயன்படும் வகையில் சிறந்த விளக்க உரையுடன் அமைந்துள்ளது. ரூ. 3 75

## பெருந்தகை மு. வ.

*—டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், M.A., M.Litt. Ph.D.*

தமிழ் நூலாசிரியருள் தலை சிறந்தவரும், நுண்மாண் நுழைபுலமிக்க புலவர் பெருந்தகையுமான டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் வாழ்க்கை வரலாறு அவர்தம் மாணவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்களால் மிகச் செம்மையாக நல்ல தமிழில் எழுதப்பட்டுளளது. ரூ. 10 00

## சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்

*—புதுவை பி. எல். சாமி, பி. எஸ்ஸி.*

சங்க இலக்கியத்தில் உயிரினங்களைப் பற்றிய செய்தி களும் ஆங்காங்கே விரவிக் காணப்படுகின்றன. முன்னர்ச் "சங்க இலக்கியத்தில் செடி கொடிகள்," "சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்" ஆகிய நூல்களை எழுதிய இந்நூலா சிரியர் இதன்கண் 38 தலைப்புகளில் சங்க இலக்கியத்தி னின்றும் பலவகைப் புள்ளினங்களைப் பற்றிய கருத்துகளைத் தொகுத்து அவற்றிற்கு இக்கால அறிவியல் நூல்களினின்றும் தக்க மேற்கோள்கள் காட்டி விளக்கம் தருகிறார். நூலகங் களில் இருக்க வேண்டிய அரிய படைப்பு. ரூ. 16 00

அப்பர் அச்சகம் சென்னை-1.